# கல்கி

KALKI 20.6.93 ரூ. 3.00

காதல் காட்சி:
நடிப்பா,
நிஜமா?





பெண்கள் கால்பந்து;
கொடுங்கள் ஆதரவு!




CX-20/202 TAM 92

# "வீரப்பனைப் பிடிக்க இரண்டே நிபந்தனைகள்!"



மோகன்தாஸ் மைனஸ் மீசை!

தலை வேறு மொட்டை.... அடையாளம் தெரியவே சற்று நேரம் பிடித்தது....

"என் அம்மாவுக்கு நாலு பெண்கள். ஐந்தாவதாகப் பிள்ளை பிறந்தால் பழனியில் முடி கொடுப்பதாக வேண்டிக் கொண்டாராம். ஆனால் அப்பாவுக்கு இதிலெல்லாம் நம்பிக்கையில்லாததால் பிரார்த்தனை நிறைவேற்றப்படாமலே இருந்தது. சமீபத்தில்தான் பழனி போய் வந்தேன். மொட்டைத் தலை பிடித்துப் போய்விட்டது. அதனால் இனிமேல் இப்படியே இருக்க விரும்பறேன்...."

– விளக்கமளித்தார் முன்னாள் டி.ஜி.பி.

"வீரப்பனைப் பிடிக்க எல்லைப் புறப் பாதுகாப்புப்படை வரவழைக்கப்பட்டுள்ளதே! மாநில போலீஸ் படைக்கும் இதற்கும் என்ன வித்தியாசம்?" என்று பேட்டியை ஆரம்பித்தோம்.

"சீனப்படையெடுப்புக்குப் பிறகு, சீனாவை ஒட்டிய இந்திய-திபெத் எல்லைப் பகுதியில் காவல் பணிக்காக, இந்தோ-திபெத் எல்லைப் படை ஒன்று உருவாக்கப் பட்டது. நாளடைவில் பாகிஸ்தானுடன் சுமுகமான உறவு இல்லாமை காரணமாக, பிரச்னைகள் எழுந்தன. இந்தியா-பாகிஸ்தான் எல்லைப் பகுதிகளையும் (அப்போதைய கிழக்குப் பாகிஸ்தான் பகுதி உட்பட) காவல் புரிய வேண்டும் என்ற கருத்தில் உருவாக்கப்பட்டதுதான் எல்லைப்புறப் பாதுகாப்புப் படை.

"ஆனால் நாட்டின் பல பகுதிகளிலும் சட்டம் ஒழுங்கு சீர் குலைவு என்பது சர்வ சகஜமாகிவிட, மாநில அரசுகள் தம் வசமுள்ள காவல்துறை, மாவட்டம் மற்றும் மாநில அளவிலான ஆயுதப்படை, (armed reserve) ஆகியவையும் போதாமல், மத்திய அரசின் உதவியை எதிர்பார்க்கிற நிலை ஏற்பட்டது. அப்போதுதான் மத்திய ரிசர்வ் போலீஸ் படை உருவாக்கப்பட்டது. சமயங்களில் இந்த மத்திய ஆயுதப்படையும் போதாமல், நிலைமையைச் சமாளிக்க எல்லைப்புற பாதுகாப்புப் படையையும் அனுப்புவது என்பது வழக்கமாகி விட்டது."

"எல்லைப்புறப் பாதுகாப்புப் படையின் பயிற்சி எப்படிப்பட்டது?"



"இது காவல் துறையின் படைதான் என்றாலும், ராணுவத்தைப் போன்று பயிற்சிக்கு உட்படுத்தப்படுகிறது. உண்மையாகவே போர் நடப்பது போன்ற சூழ்நிலைகளைச் செயற்கையாய் ஏற்படுத்தி, பி.எஸ்.எஃப். வீரர்களுக்குப் பயிற்சி தரப்படும். உதாரணத்துக்கு, எதிர்த் திசையிலிருந்து சரமாரியாக நிஜ குண்டுகள் சீறிவரும் சூழ்நிலையில், கையில் துப்பாக்கியுடன், தரையில் படுத்துக் கொண்டு, ஊர்ந்த

நிலையிலேயே முன்னேறிச் செல்லுகிற பயிற்சியைச் சொல்லலாம். தவிர, நவீன ஆயுதங்களைப் பயன்படுத்தவும் பயிற்சி தரப்படும். நூறு வீரர்கள் கொண்டது ஒரு கம்பெனி. ஆறு கம்பெனிகள் கொண்டது ஒரு படாலியன். எஸ்.பி. ராங்க் கொண்ட ஒரு அதிகாரி, படாலியனுக்குத் தலைமை வகிப்பார். ஆனாலும் இது ஒரு போலீஸ் படைதான்.''

''வீரப்பனைப் பிடிப்பதற்கு எல்லைப் புறப் பாதுகாப்புப்படையை வரவழைத்துள்ளது சரியா? அவர்களால் வீரப்பனைப் பிடித்து விட முடியுமா?''

''இது வரையில், ஒரு தனி மனிதனைப் பிடிக்கும் பணிக்காக பி.எஸ்.எஃப் அனுப்பப்பட்டதில்லை என்றே நான் நினைக்கிறேன். பி.எஸ்.எஃப்பினால் எத்தனை தூரம் வெற்றிகரமாய் இப்பணியை நிறைவேற்ற முடியும் என்பது கேள்விக் குறிதான். காரணம், கர்நாடக போலீஸ், தமிழ்நாடு போலீஸ், எல்லைப்புற பாதுகாப்புப் படை என்று மூன்று தனித்தனி அமைப்புகள் வீரப்பனைப் பிடிக்கும் பணியில் ஈடுபடுத்தப்பட்டுள்ளன. இந்த மூன்றும் ஒன்றிணைந்து செயல்படுவதில் பல நடை முறைச் சிக்கல்கள் இருக்கின்றன. ஒரே தலைமையின் கட்டுப்பாட்டில் மூன்றும் இணைந்து பணி புரிந்தால் பணி சுலபமாய் இருக்கும்.

''இவ்விஷயத்தில், போலீஸ் செய்யும் பெரிய தவறு ஓவர் பப்ளிஸிடி. மிகவும் நுணுக்கமான முறையில் திட்டமிடப்பட்டு, ரகசியமாக, விஷயத்தைச் செயல்படுத்த வேண்டுமே தவிர, பத்திரிகைகள் மூலம் வீண் சவால்கள் விட்டுக் கொண்டிருக்கக் கூடாது.''

இப்படிக் கூறிவிட்டு, மோகன்தாஸ், அழைப்பு மணியை அழுத்த, கதவைத் திறந்து கொண்டு, மூன்று குழந்தைகள் ஓடி வருகின்றன.

Boss I, Boss II, Boss III என்று தம் பேரக் குழந்தைகளை அறிமுகப்படுத்தி விட்டு, ''நான் இவர்களுக்கெல்லாம் சூப்பர் பாஸ்'' என்கிறார் மோகன்தாஸ். பேத்தியிடம், ''போய் எல்.எஸ்.பி. (லேடி சூப்பர் பாஸ்)யை அழைத்து வா'' என்கிறார். திருமதி மோகன்தாஸ் அழைத்துவரப்படுகிறார். அவரிடம் எஃப்.வி. அருள் அளித்த வாழ்த்தினைக் கொண்டு வரும்படி கூறி விட்டு, நம்மிடம் தொடர்ந்து பேசுகிறார்.

''நான் டி.ஜி.பி. ஆக இருந்த போது, விடுதலைப் புலிகளிடமிருந்து ஆயுதப்பறிப்பினை நடத்தினேன். திட்டம் மிக மிக ரகசியமாய்ச் செயல்படுத்தப்பட்டது. திட்டத்தைச் செயல்படுத்தியவர்களுக்குக் கூட, அவர்கள் என்ன செய்ய வேண்டும் என்றுதான் தெரிவிக்கப்பட்டதே தவிர, முழுமையான திட்டம் என்னவென்று தெரியாது.''

திருமதி மோகன்தாஸ் கொண்டு வந்த ஃப்ரேம் செய்யப்பட்ட வாழ்த்துரையைக் காட்டுகிறார் மோகன்தாஸ்.

அதில் முன்னாள் தமிழக போலீஸ் துறைத் தலைவர் எஃப்.வி. அருள், மோகன்தாஸ் நடத்திய ஆயுதப் பறிப்பு குறித்து வெகுவாய்ப் பாராட்டிய செய்தி இடம் பெற்றுள்ளது.

''திட்டத்தை ரகசியமாய்ச் செயல்படுத்துவது தவிர, எதிரியை, திடீரென்று தாக்கி நிலைகுலையச் செய்ய வேண்டும். அதுவும் ரொம்பவும் முக்கியமான அம்சம்'' என்கிறார் அழுத்தமான குரலில்.

''உங்களிடம் வீரப்பனைப் பிடிக்கும் பணி ஒப்படைக்கப்பட்டால் உங்களால் அவனைப் பிடிக்க முடியுமா?''

''பஞ்சாப்பில் டி.ஜி.பி. ஆக இருந்த ரெபைரோ ஓய்வு பெற்றபோது, மத்திய அரசு, நான் பஞ்சாப் டி.ஜி.பி. ஆகப் பொறுப்பேற்க முடியுமா என்று ரெபைரோ மூலமாகவே கேட்டது. நான் சொன்னேன், 'பஞ்சாப் டி.ஜி.பி. ஆகப் பொறுப்பேற்க நான் ரெடி. ஆனால் இரண்டு கண்டிஷன்கள். ஒன்று : நான் தன்னிச்சையாகச் செயல்படுவதற்கு, முழுமையான சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும்; இரண்டு, இப்போதுள்ள போலீசாருக்குப் பதிலாக, இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும், என் விருப்பப்படி போலீஸ் அதிகாரிகளைத் தேர்ந்தெடுத்து, பஞ்சாப்பில் என் கீழே பணிபுரிய வைப்பேன். இதற்குச் சம்மதிக்க வேண்டும்...' என்றேன்.

''என் கண்டிஷன்களைக் கேட்டுப் பலமாய்ச் சிரித்து விட்டு, ரெபைரோ சொன்னார்; 'அரே பாய்! அதற்கு அனுமதி அளிக்கப்பட்டிருந்தால், நானே மூன்றுமாதத்தில் பயங்கரவாதத்துக்கு முற்றுப் புள்ளி வைத்திருப்பேனே!'

''அன்றைக்கு நான் ரெபைரோவிடம் சொன்ன கண்டிஷன்களைத்தான் இன்றைக்கு வீரப்பன் விஷயத்திலும் சொல்ல விரும்புகிறேன்!''

சந்திப்பு : எஸ். சந்திரமௌலி



இந்தப் படத்தில் இருப்பவர் யார் என்று தெரிந்து கொள்ள 59 ஆம் பக்கத்தில் உள்ள படத்தைப் பாருங்கள்...



ஸ்ரீ
# கல்கி



1993
ஜூன் 20
மலர் : 51
இதழ் : 47
ஸ்ரீமுக
ஆனி 6

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

## புட்டபர்த்தி மர்மங்கள்!

புட்டபர்த்தி பிரசாந்தி நிலையத்தில் நடந்துள்ள சம்பவங்கள் ஸ்ரீ சத்திய சாயி பாபாவின் பக்தர்களுக்கு அதிர்ச்சியையும் துயரத்தையும் அளித்துள்ளன. அவற்றின் ஊடே ஒரு பழைய சம்பவமும் நினைவு வருகிறது. 'கல்கி'யும் ரசிக மணி டி.கே.சியும் சம்பந்தப்பட்ட சம்பவம்.

அறத்துக்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்துக்கும் அஃதே துணை

என்ற இந்தக் குறளுக்குப் பல்வேறு உரையாசிரியர்களும் பின்வருமாறு அர்த்தம் சொல்லிக் கொண்டிருந்தார்கள் : ''அன்பு என்பது நல்லனவற்றைச் செய்வதற்குக் காரணமாகிறது என்பது மட்டுமல்ல, தீமைகள் நடக்காதிருக்கவும் அந்த அன்பே துணை நிற்கிறது.''

டி.கே.சி. இந்தக் கருத்தை ஏற்கவில்லை. உரையாசிரியர்கள் குறளில் இல்லாத ஒரு விஷயத்தைச் சேர்த்துச் சொல்வதாகவும் குறளில் உள்ள சொற்களை மட்டுமே பார்க்க வேண்டும் என்றும் கூறினார். பின்வருமாறு பொருள் உரைத்தார் :

''அன்பு, அறமான காரியங்கள் நடப்பதற்கு மட்டுமே காரணமாயிருப்பதாக நினைப்பவர்கள் அறியாதவர்கள்; தீமை (மறம்) நடப்பதற்கும் அந்த அன்பே துணை நிற்கிறது!'' இது டி.கே.சி.யின் வாதம். ''தீமையைத் தவிர்ப்பதற்கு என்று குறள் கூறவில்லை; 'மறத்துக்கும் அஃதே துணை' என்றுதான் சொல்கிறது'' என்றார்.

டி.கே.சியின் இந்தக் கருத்தைக் ''கல்கி'' ஏற்றதன் விளைவாக உருவானதுதான், ''கள்வனின் காதலி'' என்ற சிரஞ்சீவித்துவம் பெற்ற நாவல். அதில் முத்தையனின் காதலியான கல்யாணி, அவனிடம் உள்ள மகத்தான அன்பு காரணமாகவே தவறு இழைத்து, அதன் விளைவாக முத்தையனையே இழக்கிறாள்.

ஒரு பக்கம் அன்பு, அன்புக்குரியவரிடம் அணுக்கமாக இருப்பதில் யார் அதிக வெற்றி பெறுகிறார்கள் என்பதில் போட்டா போட்டியை ஏற்படுத்தித் தவறு செய்யத் தூண்டுகிறது. கள்வனின் காதலியான கல்யாணியின் நிலை இதுதான்.

இன்னொரு பக்கம் அன்பு அடையும் வெற்றியினால் பாதிக்கப்படுகிறவர்கள், அன்பு மதத்தைப் போதிப்பவர்கள் மீது பகைமையை வளர்த்துக் கொண்டு ஆத்திரத்தில் அறிவிழந்து தகாத செயல்களைப் புரிகின்றனர். இதற்கு ஏசு முதல் அண்மைக் கால காந்தி, மார்ட்டின் லூதர் கிங் வரை பலரது உயிர்த் தியாகங்கள் எடுத்துக்காட்டுக்களாக விளங்குகின்றன.

இந்த இரண்டில் எது புட்டபர்த்தியில் செயல்பட்டது என்பது இன்னும் தெளிவாகவில்லை. 'பாபாவிடம் அணுக்கமாக இருந்த தொண்டர்களிடையே போட்டா போட்டி அதிகரித்து, அதுவே இந்தத் துயரத்தில் முடிந்தது' என்பது ஒரு தகவல்.

'பாபாவின் அன்பு மத போதனையால், சர்வமத சம்மதப் போக்கால் தங்களுடைய ஹிந்துத்துவம் கொள்கை பாதிப்புக்கு உள்ளாகிறது என்பதால் கோபம் கொண்டு, ஹிந்து மதத் தீவிரவாதிகள் செய்து விட்ட காரியம் இது' என்பது ஒரு செய்தி.

'பம்பாயில் தொடர் குண்டு வெடிப்புக்குக் காரணமாயிருந்த முஸ்லிம் தீவிரவாதிகள் அந்தச் செயலின் தொடர்ச்சியாக இங்கேயும் கைவரிசையைக் காட்டி விட்டார்கள்' என்பது மேலும் ஒரு கருத்து.

இவையெல்லாம் வெறும் ஊகங்கள் மட்டுமல்ல; அங்கு கண்டுபிடிக்கப்பட்ட, ஆர்செனிக் விஷப் பாக்கெட்டுகள்; குண்டுகள், ஆயுதங்கள் முதலியன வலுவான தடயங்களாகவும் அமைந்துள்ளன.

மத்திய உள்துறை அமைச்சர் சவான் வந்து விசாரித்து விட்டு, ''போலீஸ் தன் கடமையைச் செய்யும், சி.பி.ஐ. சம்பந்தப்பட அவசியமில்லை'' என்று கூறியுள்ளார். ''பாபாவையே கொல்ல நடந்த முயற்சி என்று கருத போதிய சான்றுகள் இல்லை; இல்லாமலும் இல்லை'' என்று போலீஸ் உயர் அதிகாரி சொல்லியிருக்கிறார்.

புட்டபர்த்தி மர்மங்கள் குறித்து பலரும் பலவிதமாகப் பேசினாலும் முக்கியமான ஒருவர் - சத்திய சாயி பாபா - இன்று வரை (11.6.93) ஒரு வார்த்தையும் கூறவில்லை. இவ் விஷயத்தில் பத்திரிகைகளுக்குத் தாம் அறிக்கை விட்டுக் கொண்டிருப்பது தவறு என்று அவர் கருதியிருக்கலாம். ஆயினும் விசாரணை என்று வரும் போது உரியவரிடம் சரியானபடி பேசி சத்தியம் நிலை நாட்டப்பட உதவுவார் என்று எதிர்பார்ப்போம்.

நம்பிக்கையோடு இருப்போம். அறமா, மறமா? அன்பா, துவேஷமா? என்னும் போது, அறத்தையும் அன்பையுமே உறுதியாகத் தேர்ந்தெடுப்போம்.

***"கேரளா, மஹாராஷ்டிரா, மேற்கு வங்கம்... இங்கெல்லாம் பெண்கள் கால்பந்து சுறுசுறுப்பா இருக்கு.... கேரளாவில் சுமார் 500 பெண்கள் ஆடுகிறார்கள். இங்கே 50-60 தான் இருக்கும்....."***

**பொ**துவாகவே நம் நாட்டில் விளையாட்டுத் துறையில் போதுமான கவனம் செலுத்தப்படுவதில்லை என்ற குறை அதிகமாக இருக்கிறது. அதிலும் பெண்கள் புதிதாக ஒரு விளையாட்டை ஆட ஆரம்பிக்கும்போது எந்தத் தரப்பிலிருந்தும் முழு மனத்துடன் ஊக்கம் கிடைப்பது அரிதாகவே இருக்கிறது.

'பெண் குழந்தை விளையாட்டை இவ்வளவு சீரியஸாக எடுத்துக் கொள்ள அவசியமென்ன....?' என்று குடும்பத்தில் மரபு ரீதியான எதிர்ப்பு.

'பெண்கள் ஆட்டம்தானே, அது இரண்டாம் பட்சமாகத்தான் இருக்கும்....' என்ற பார்வையாளர்களின் (சமுதாயம்?) மனோபாவம்.



* ...... தாவிப் பிடித்து... பயிற்சி

# பெண்கள் கால்பந்து; கொடுங்கள் ஆதரவு!



* தலையால் தட்டி....



✱ ராதாகிருஷ்ணன்

'ஏற்கெனவே ஆண்களால் ஆடப்பட்டு வரும் விளையாட்டுகளை வளர்க்கவும் ஊக்கப்படுத்தவும் போதுமான நிதி ஆதாரம் இல்லாத போது புதுசாகக் கிளம்பும் பெண்கள் அணிகளுக்கு எப்படி ஆதரவு கொடுக்க முடியும்?' என்று அதிகார மட்டத்தில் முன் வைக்கப்படும் வாதம்....

இதையெல்லாம் மீறி, தமிழ்நாட்டில் துடிப்புடன் வளர்ந்திருக்கிறது பெண்கள் கால்பந்து. வளர்ச்சிக்கு ஒரு சான்று டைனமோஸ் அணி. இதற்காகப் பெரிதும் உழைத்த ராதாகிருஷ்ணன் தம் அனுபவத்தைச் சொல்கிறார் :

''பத்து வருஷங்களுக்கு முன்னால் என் நண்பர்கள் ராமகிருஷ்ணன், ஐ.சி.எப். அணியின் முன்னாள் கோல் கீப்பர் ஸ்டீபன் ஸ்டெட்ராக், துரைவேலு, ஆகியோருடன் இணைந்து டைனமோஸ் ஸ்போர்ட்ஸ் கிளப்பின் பெண்கள் ஃபுட் பால் குழுவைத் தொடங்கினேன்.

''ஆரம்ப நாட்களில் ஒவ்வொரு பள்ளிக்கூடத்துக்கும் கல்லூரிக்கும் சென்று தலைமை ஆசிரியை அல்லது முதல்வரைச் சந்தித்து, மாணவிகளுக்கு ஃபுட் பால் கோச்சிங் கொடுக்க நாங்கள் தயாராய் இருப்பதாகச் சொன்னோம். அவர்களும் ஒரு நேரத்தைக் குறிப்பிட்டு அப்போது வரும்படி சொல்வார்கள். அந்த நேரத்துக்குப் போனால் மாணவிகளே இருக்க மாட்டார்கள்! அல்லது வேறு விளையாட்டிலோ, படிப்பிலோ ஈடுபட்டிருப்பார்கள்.

''இருந்தாலும் நாங்கள் விடாமல் முயன்று கொண்டே இருந்தோம்.

''மாணவிகளுக்கு நாட்டம் வந்து விளையாட ஆரம்பிக்கும் சமயத்தில் 'ஐயோ ஷார்ட்ஸ் அணிந்து கொண்டு ஆண்கள் விளையாட்டை விளையாடுவதா! வேண்டாம்!' என்று பெற்றோர் 144 போட்டு விடுவார்கள்.

''எல்லோருக்கும் சமாதானம் சொல்லி, நம்பிக்கை அளித்து, ஒரு குழுவுக்குத் தேவையான எண்ணிக்கையில் பெண்களை ஒருங்கிணைப்போம். பத்து பதினைந்து நாட்கள் பயிற்சி நடக்கும். பதினாறாம் நாளிலிருந்து ஒரு மாதத்துக்குள் இலை உதிர்வது போல் ஒவ்வொருவராக அணியிலிருந்து விலகி, விளையாடுவதையே நிறுத்தி விடுவார்கள்.

''மனமுடைந்து போகாமல் முயன்று கொண்டே இருந்ததால் இன்று டைனமோஸ் பெண்கள் ஃபுட்பால் அணி ஒன்று உருவாகியுள்ளதோடு, அது, தென்மண்டல பெண்கள் ஃபுட்பால் அணிகளுள் முன்னணியில் இருக்கிறது; உறுதியான குழு என்று பாராட்டப்படும் மேற்கு வங்கக் குழுவை எதிர்த்து விளையாடி 'draw' செய்துள்ளது.....''

டைனமோஸின் ஜூனியர் பெண்கள் ஃபுட்பால் அணியும் இப்போது தயாராகி வருகிறது. இதைத் தவிர தமிழ்நாட்டில், நெய்வேலி லிக்னைட் கார்பரேஷனின் பெண்கள் அணி, ஒய்.எம்.சி.ஏ. பெண்கள் அணி போன்றவையும் ஃபுட்பால் பந்தயங்களில் பங்கேற்கின்றன.

தமிழ் நாட்டு ஃபுட் பால் வீராங்கனைகளுக்கு இருக்கும் பிரச்னைகள் குறித்து டைனமோஸ் அணியைச் சேர்ந்த சில பெண்களிடம் கேட்டோம்.

''பத்து வருஷமா 'ஃபுட்பால், ஃபுட் பால்'னு துடிச்சதுல படிப்பை சீரியஸா வே எடுத்துக்கலை. தேசிய அளவுல எல்லா பயிற்சி முகாம்களுக்கும் போனேன். பந்தயங்கள்ல ஜயித்த அனுபவம் கிடைச்சது. ஆனால் அதெல்லாம் எந்தவித அங்கீகாரத்தையும் எனக்கு வாங்கித் தரலை....'' இது ஜானகியின் வருத்தம்.

✱ ஜானகி



மோனிகாவும் இதே ரீதியில்தான் பேசுகிறார் : ''மத்த விளையாட்டுகள் ஆடினா வேலை கிடைக்குது - ஸ்போர்ட்ஸ் கோடாவிலே... ஆனால் பெண்கள் ஃபுட் பாலை யாரும் கண்டு கொள்ளக் கூட மாட்டேங்கறாங்க...''

''கேரளா, மஹாராஷ்டிரா, மேற்கு வங்கம்... இங்கெல்லாம் பெண்கள் கால் பந்து சுறுசுறுப்பா இருக்கு.... கேரளாவில் சுமார் 500 பெண்கள் ஆடுகிறார்கள். இங்கே 50-60 தான் இருக்கும்..... தேசிய அளவிலான பந்தயங்கள்ளாம் அங்கேதான் நடத்தறாங்க. தமிழ்நாட்டிலேயும் அது மாதிரி பந்தயங்கள் நடத்தினாத்தானே இங்க இருக்கற பெண்களுக்கு ஊக்கமும், உற்சாகமும் ஆர்வமும் உண்டாகும்...?'' என்று கேட்கும் ராஜேஸ்வரி தமது சொந்தப் பிரச்னையையும் முன் வைக்கிறார்.

''எங்க வீட்டுல 'விளையாடக் கூடாது'ன்னு தடுக்கலை... ஆனால் 'இதுனால என்ன பிரயோஜனம்? வெறும் பாத்திரம், பாத்திரமா நினைவுப் பரிசு வாங்கிக் கொண்டு வந்தா போதுமா....?' அப்படின்னு கேட்கத்தான் செய்யறாங்க....''

**ஆ**ண்கள் மேட்ச் விளையாடிவிட்டு வந்தால் பேட்டா கிடைக்கிறது; பயணச் செலவு, தங்கும் செலவு, இதர சில்லறை செலவுகளைப் பந்தயம் நடத்தும் அமைப்புகளே ஏற்கின்றன. ஆனால் பெண்கள் விஷயத்தில் அப்படியில்லை. ஒவ்வொரு குழுவும் கிளப் ஆதரவில் கொஞ்சம் கைக்காசையும் செலவழித்துக் கொண்டு போய் வர வேண்டியுள்ளது....

பொருளாதார ரீதியில் ஒத்து வராமல் போகவேதான் தமிழ் நாட்டின் மிகச் சிறந்த ஃபுட்பால் வீராங்கனைகளுள் ஒருவரான லதா இன்று இந்த விளையாட்டுக்கே முழுக்குப் போட்டுவிட்டு குமாஸ்தா வேலைக்குப் போய்விட்டார். அகரத்தனமாகப் பயிற்சி செய்து, இந்திய அணியில் இடம்பிடித்து டென்மார்க் வரை சென்று ஆடியவருக்குத்தான் இந்த கதி!

இதெல்லாம் தெரிந்தும் கஷ்டத்தையும் செலவையும் பாராமல் பல பெண்கள் பயிற்சி செய்து கொண்டிருக்கிறார்கள் என்றால்... புதிய பெண்கள் வந்து சேர்கிறார்கள் என்றால்... அதற்கு ஒரே காரணம் அவர்களுக்கு இந்த ஆட்டத்தில் உள்ள ஆர்வம் தான்.

இந்த ஈடுபாட்டைப் புரிந்து கொண்டு தமிழ்நாடு பெண்கள் ஃபுட்பால் அமைப்பு மற்றும் அனைத்திந்திய ஃபுட்பால் ஃபெடரேஷன் போன்றவை செயல்பட்டால் சிறப்பான எதிர்காலம் அமைய நிறையவே வாய்ப்பு இருக்கிறது....

– துளசி

அட்டை வண்ணப்படம், படங்கள் :
**கோபிநாத்**



# காதல் காட்சி:



சமீபத்திய புதியமுகம் படத்தில் தன் (நிஜ) கணவரின் (சினிமா) காதலியாக நடித்த அனுபவம் பற்றி ரேவதி இங்கே பேசு கிறார்....

## கிழவி ஏற்படுத்திய பாதிப்பு

**எ**ங்க டெலிஃபோட்டோ யூனிட்லேர்ந்து ஒரு படம் பண்றதுன்னு முடிவு ஆனதிலேர்ந்து நானும் முழு மூச்சா ப்ரொடக்ஷன் ஒர்க்லே கலந்துக்கிட்டேன். டிஸ்கஷன் போது - கொஞ்ச நேரத்திலேயே - இது சாதாரண தீம் இல்லைன்னு புரிஞ்சு போச்சு. மேலோட்டமா பார்த்தா ஒரு த்ரில்லர் மாதிரி தெரிஞ்சாலும் அடித்தளம் முழுக்க சென்டிமென்ட்தான். அதுவும் இரண்டாவது பகுதில, ஐம்பது வயசுக்காரியா, இருபது வயசுப் பையனுக்கு அம்மாவா வர்றா மாதிரி கதை. வெறும் கேரக்டரை மட்டும் வித்தியாசமா வெச்சுட்டு, படம் சாதாரணமா இருந்தா அவ்ளோ இன்ட்ரஸ்ட் வராது. ஆனால் இந்தப் படத்துல அந்த கேரக்டர் மூலமா படத்துக்கே ஒரு புதுப் பரிமாணம் கிடைச்சாப்ல இருந்தது. நான்தான் இந்தப் படத்துல நடிக்கணும்ன்னு சொன்ன போது அந்தக் கிழவி கேரக்டர் தந்த பாதிப்பால உடனே ஓகே சொன்னேன்.



# நடிப்பா, நிஜமா?

வெறும் மேக்-அப்பால மட்டும் இல்லாம நிஜமாவே என்னால ஒரு வயசான ரோல்ல நடிக்க முடியுமான்னு பார்க்க ஒரு ஆவல்.....

## 'ஐயோ, நான் மாட்டேன்!'

ஹீரோயின் நான்னு முடிவு ஆயாச்சு. ஹீரோ யாரு? அந்த கேரக்டருக்கு யாராவது ஒரு புதுமுகம் தான்னு ஏற்கெனவே முடிவு பண்ணியிருந்தாங்க. அந்தப் புதுமுகம் சுரேஷ்தான்னு தீர்மானம் ஆன போது எனக்கு ரொம்ப வெட்கமா போயிடிச்சி! இரண்டாவது பகுதியில மனைவியா வந்தாலும் முதல் பகுதியில காதலியா வந்து ஜாலியா பாட்டு பாடற கேரக்டர். என் ஹஸ்பண்டோட நானே லவ்வரா நடிக்கறதா? ஐயோ, நம்மால முடியாதுப்பான்னுட்டேன், மொதல்ல! அப்புறம் யார்யாரோ என்னென்னமோ சொல்லி கன்வின்ஸ் பண்ணாங்க.

## ஆஹா, அந்த அனுபவம்!

ஷூட்டிங்குக்குக் கிளம்பின போது ஒரே வினோதமா இருந்துச்சி. மனசுக்குள்ள ஒரு மாதிரி குறுகுறுப்பு. எப்படிடா நடிக்கப் போறோம்னு, இலேசா சங்கடம் கூட..... ஆனா அவருக்கு அந்த மாதிரி ஒண்ணும் ஃபீலிங்லே இல்லை போலிருக்கு. சாதாரணமாகத்தான் இருந்தார். ஒரே சந்தோஷம் என்னன்னா, யூனிட் முழுக்க எங்களோடவே ரொம்ப வருஷமா இருக்கிறவங்கதான்! அதனால ஸ்பாட்ல கொஞ்சம் ஃப்ரீயா இருக்க முடிஞ்சது. ஆனா அந்த ரோஜாப்பூ ஸீன்ல, 'தோற்று இல்லாத மாற்றம்' பாட்டும் போதெல்லாம்.... ஒரே சிரிப்பு சிரிப்பா வருது, நடிக்கவே முடியல.... எப்படி முடிக்கப் போறோம்னு பயமே வந்துடிச்சி. ஆனா ஒண்ணு.. வழக்கமா ஷூட்டிங் ஷூட்டிங்னு பகலெல்லாம் அலைஞ்சுட்டு நைட்தான் சுரேஷை என்னால பார்க்க முடியும். சில நாள் நான் வர்றத்துக்குள்ள அவர்தூங்கியே போயிருப்பார். ஆனா இந்தப் படத்துல நான் முழுக்க அவர் கூடவே இருந்தது ரொம்ப ஜாலியா, சந்தோஷமா இருந்தது! என்டா ஷூட்டிங் முடியுதுன்னு ஒரே துக்கமா இருந்தது! நான் ஃபுல்லா இவரோடவே இருந்துட்டு இப்ப வேற ஷூட்டிங் போறதுன்னா கஷ்டமா இருக்கு! ரொம்ப சோம்பேறித்தனமா இருக்கு!



## சிலோன் போன போது....

கதைல பாதி சிலோன்ல நடக்கிறதால பதினைஞ்சு நாள் சிலோன் போயிருந்தோம். நாங்க போன நேரத்துல அவங்க டீ.வில எங்களோட 'இரவில் ஒரு பகல்' சீரியல் வந்திட்டிருந்தது! அதனால அந்த ஊர் ஜனங்களுக்கு நானும் சுரேஷும் அன்னியமாகவே இல்லை. ஐயோ! எவ்ளோ உதவிகரமா இருந்தாங்க தெரியுமா? நாங்க நினைச்சிட்டுப் போனதே வேற. ஊரெல்லாம் கலவரம். ஒருத்தரும் வீட்டை விட்டு வெளியே



# சுரேஷ் மொழிகள்

● புதிய முகம் கதை ஒரு ஆங்கில நாவலின் தழுவல். இரண்டாம் உலகப் போரில் நாஜி வீரன் ஒருவன் பிளாஸ்டிக் சர்ஜரி பண்ணிக் கொண்டு எதிரி முகாமிலிருந்து தப்பிப்பதாக அந்த நாவல் பின்னப்பட்டிருந்தது. அது தான் இந்தக் கதையின் பேஸ்.

● கதை என்னதான் வித்தியாசமாக இருந்தாலும் முழுக்க முழுக்க கமர்ஷியல் படம் என்று முன்னமேயே முடிவு செய்து விட்டதால் தெரிந்தே சில தவறுகளை, திரைக் கதையில் செய்தோம். லாஜிக் சில இடங்களில் இடிப்பது உற்று கவனித்தால் தெரியும். ஆனால் படம் போகிற வேகத்தில் அடுத்த நிமிஷமே அவையெல்லாம் மறந்து விடும்.

● நான் பண்ணியிருக்கிற இந்த கேரக்டரை சத்யராஜோ, வேறு யாராவதோ பண்ணியிருந்தால் இன்னும் சிறப்பாக இருந்திருக்கலாம். ஆனால் நடிப்பதற்கு அதிக வாய்ப்பு இல்லாத அந்த ரோலில் அவர்களை ஏன் வீணடிக்கணும் என்று தோன்றியதால் நானே பண்ணி விட்டேன்.

● என் நடிப்பில் இருக்கிற ஓட்டைகள் எனக்கு நன்றாகத் தெரிகின்றன. இன்னும் நடிப்பு எனக்குப் பழகவில்லை. இருந்தாலும், எங்கள் முந்தைய சீரியலில் பண்ணியிருந்த அளவுக்கு அத்தனை மோசமில்லை என்று நினைக்கிறேன். முனைந்து கற்றுக் கொள்ளலாம், ஆனால் நடிப்பதில் எனக்கு ஆர்வம் இல்லை.

● ரேவதியோடு நடித்தது - ஒன்றும் வித்தியாசமாகத் தெரிய வில்லை. ஆனால் ஒரு ஹோம்லி ஃபீலிங். படம் முடிக்கிறவரைக்கும் இருந்தது.

வர மாட்டாங்கன்னு பார்த்தா, கொழும்பு லைடுலல்லாம் ரொம்ப அமைதியாத்தான் இருந்தது. நாங்க ஷூட்டிங் போன இடங்களில் ஜனங்க, வீட்டு ஞாபகமே இல்லாம உதவினாங்க.

## காணாமல் போன வினித்

கொழும்புல வினித்தும், கஸ்தூரியும் ஷாப்பிங் போயிருந்தாங்க. கும்பல்னாலயோ, ஊர் புதுசுங்கிறதாலயோ - வினித் காணாமப் போயிட்டாரு. கஸ்தூரி தேடு, தேடுன்னு தேடியிருக்காங்க. அப்புறம் அந்த ஏரியாக்காரங்க ஹெல்ப் போட எப்படியோ கண்டு பிடிச்சுட்டோம். இந்த மாதிரி குட்டி குட்டியா சிலோன் மக்கள் பண்ணியிருக்கிற உதவி இருக்கே... நமக்கெல்லாம் அந்த மனசு வருமான்னு ஆச்சரியமா இருக்கு! ஒரு பெரிய அருவி... காட்டுப் பகுதில. ரொம்ப ஆழம். அந்த ஏரியாவில் ஷூட் பண்றதுன்னு முடிவு பண்ணாங்க. ஆனா எப்படி இறங்கறதுன்னு தெரியலை. ஊருக்குள்ள போய் விஷயத்தைச் சொன்னோம். அவங்க கும்பலா வந்து பார்த்துட்டு ஆச்சரியப்பட்டாங்க. ''எங்களுக்கே இந்த ஏரியாவில் இப்படி ஒரு அருவி இருக்குன்னு தெரியாது சார்'' அப்படீன்னு. அப்புறம் அந்த ஷாட் முடியற வரைக்கும் கூடவே இருந்து, சலியா எடுக்க எல்லா வசதிகளும் பண்ணிக் கொடுத்து, கிரேட்!

## குடும்பப் படம்

கொடைக்கானல் ஷூட்டிங் போது நாஸர் அவங்க குடும்பத்தோட வந்திருந்தார். ராக்கியும் ஃபேமிலியோட வந்தார். சின்னி ஜெயந்த் - சுரேஷுக்கு ரொம்ப நாளாவே தோஸ்த்! முழு படம் எடுக்கிற வரை எங்களுக்கு ஷூட்டிங் மாதிரியே தெரியலை. என்னமோ நாலஞ்சு ஃபேமிலி ஒண்ணா பிக்னிக் போற மாதிரிதான் இருந்தது!

சந்திப்பு : பா. ராகவன்
புகைப்படங்கள் : கோபிநாத்

# பெயரில் பெருமை! செயலில் அருமை!




லூனா சூப்பர் தன் உறுதியை நிரூபித்துவிட்டது! ஸ்ரீபெரம்புதூரில் நடைபெற்ற அனைத்திந்திய மோட்டார் ஓட்டப் பந்தயத்தில்.

புணேயின் சாம்பியன் சதிஷ் ஆப்தே, மணி ஒன்றுக்கு சராசரி 105 கிமீ வேகத்தில் வெற்றிபெற்றார்! லூனா சூப்பர் வேகம் மிகுந்தது என்பது நிரூபணமாகிவிட்டது! உண்மையிலேயே வேகமானது.

KINETIC ENGINEERING LIMITED

# ஊழலற்ற மனிதர்களின் நாடு!



* பர்க்கினா ஃபாஸோவின் தலைநகர் அவ்கடௌகவ்

நரசிம்மராவ் கஜகஸ்தான் மாதிரி சின்னச் சின்ன நாட்டுக்கெல்லாம் ஓடோடிப் போய் உதவிகள் செய்கிறார். குட்டி நாடுகள் சிலவற்றின் தலைவர்களோ, நேரே தில்லிக்கே வந்து விடுகிறார்கள். அப்படி சமீபத்தில் வந்து பொருளாதார ஒப்பந்தங் களில் கையெழுத்திட்டிருக்கிறார் ஒரு சின்ன ஆப்பிரிக்க நாட்டின் அதிபர் ப்ளெய்ஸ் கம்போர். நாட்டின் பெயர் பர்க்கினா ஃபாஸோ.

வடக்கிலும் மேற்கிலும் மாலி, தெற்கே கானா என்று அமைந்த இந்த மேற்கு ஆப்பிரிக்க நாடு, முன்பு பிரெஞ்சு ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்தது. ஆகஸ்ட் '84 வரை அப்பர் வோல்ட்டா என்றுதான் இந்த நாடு அறியப்பட்டிருந்தது.

அதிகாரபூர்வமான மொழி பிரெஞ்சுதான். ஆனாலும் மொஸ்ஸி போன்ற ஆப்பிரிக்க மொழிகளும் பழக்கத்தில் இருக்கின்றன. தலைநகரம் அவ்கடௌகவ் (Ouagadougou). பரிகசிக்கிற மாதிரி இருந்தாலும் ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள், எந்த க்விஸ்ஸிலாவது கேட்டு வைக்கப் போகிறார்கள்!

1960 ஆகஸ்ட் 5 ஆம் தேதிதான் நாட்டுக்கு முழு விடுதலை கிடைத் தது. ஆனால் சீக்கிரமே ராணுவப் புரட்சி ஏற்பட்டது. சில வருடங்கள் தத்தளிப் புக்குப் பின் ஒரு வழியாக ஜனநாயகம் நிலைத்துள்ளது.

இப்போதுள்ள அரசியல் சாசனச் சட்டப்படி, ராணுவப் புரட்சி காரணமாக அமைக்கப்படும் அரசுக்கு ஆட்சி அங்கீ காரமே கிடையாது!

அதிபருக்கு அதிகாரம் நிறையவே கொடுக்கப்பட்டிருந் தாலும், பல கட்சி அமைப்பு ஜனநாயக மும், சுதந்திரமான நீதித்துறையும் அதிபர் தடம் புரளாமல் இருக்க உதவுகின்றன.

பர்க்கினா ஃபாஸோவின் மொத்த பரப்பளவு 2,74,200 சதுர மீட்டர் தான்! மக்கள் தொகை சுமார் 91 லட்சம். இதில் முப்பது சதவிகிதம் முஸ்லிம்கள். பத்து சதவிகிதம் கிறித்துவர்கள். முக்கிய தொழில் விவசாயம், தங்கம், வெள்ளி, ஈயம், மாங்கனைஸ் போன்ற கனிம வளங் களும் உண்டு.

ஏழு வயது முதல் 14 வயது வரை அனைவருக்கும் இலவசக் கல்வி. இரண்டு வருடம் பகுதி நேர ராணுவ சேவை கட்டாயம்!

இத்தனூண்டு நாட்டில் ஏழு தினசரிகள். எட்டு பத்திரிகைகள். அதில் ஒன்று நகைச்சுவை- கிண்டல் பத்திரிகை. (அங்கேயும் ஒரு 'சோ'!)

* குடியரசுத் தலைவருடன் ப்ளெய்ஸ் கம்போர்...



பயங்கர வன விலங்குகள் நிறைந்த மௌடௌன் நதிப் பிரதேசம் டூரிஸ்ட்டு களை இந்த நாட்டுக்கு வரவழைக்கிறது!

பர்க்கினா ஃபாஸோ என்றால், ஊழலற்ற மனிதர்களின் ஊர் என்று அர்த்தமாம். (இதற்கு எதிர்ப்பதம் தெரிந்தால் நம்மூர்க் காரர்களுக்கு வசதியாய் இருக்கும்!)

– எஸ். வி: என்.



# டாக்டர் மாம்

## ஹெர்பல் குரோத் டானிக் உங்கள்

## குழந்தை வளர்ச்சி அடைவதற்கு உண்ணும் ஆவலைத் தூண்டுகிறது.

நீங்கள் உணவு ஊட்டும் போதெல்லாம் உங்கள் குழந்தைகள் உண்ணாமல் தட்டிவிட்டு விளையாட்டில் கவனம் செலுத்துகின்றன. ஆகவே வளரும் வாய்ப்பை இழக்கின்றன. உங்கள் குழந்தைக்கு நன்கு சாப்பிடும் பழக்கம் இருந்தால் அது வளர்வதற்கு அத்யாவசியமான புரதம், கார்போ ஹைட்ரேட்ஸ் தாதுக்கள் வைட்டமின்கள் ஆகிய சத்துக்கள் கிடைக்கும். இதற்கு வழி: குழந்தைக்கு சாப்பாட்டிற்குமுன் ஒன்று அல்லது இரண்டு ஸ்பூன் டாக்டர் மாம் கொடுங்கள். அது உண்ணும் ஆவலை நன்கு தூண்டும். இதில் ஒரு நன்மை என்னவென்றால் இந்த டானிக், தெவிட்டாத ருசி உள்ளது. நீங்கள் நல்ல வித்தியாசத்தை கவனிக்கலாம். குழந்தைக்கு விளையாட்டுக்காட்டியோ பலவந்தப்படுத்தியோ உணவு ஊட்டத் தேவை இல்லை குழந்தை தானே மேலும் மேலும் கேட்கும். விளையாட்டில் துடிதுடிப்பு. படிப்பிலே கூர்மை வேகம், அத்தனை சக்தி குழந்தைக்கு. உங்கள் குழந்தைக்கு அன்றாடம் டாக்டர் மாம் டானிக் சாப்பிடும் பழக்கத்தை ஏற்படுத்துங்கள். குறிப்பாக வளர்ச்சியின் முக்கிய காலக்கட்டமான 3 வயது முதல் 12 வயதுக்கு இடையே. உங்கள் குழந்தைக்கு அது வழக்கமாகிவிடும். அதை குழந்தை மிகவும் விரும்பும். டாக்டர் மாம் பல்லாண்டுகளாக நிரூபணம் பெற்ற மூலிகைகளான பிராஹ்மி, அஸ்வகந்தா, அம்லாகி போன்றவற்றை தூய்மையான வடிவில் கொண்டுள்ளது. அது இயற்கையானது, பாதுகாப்பானது, மருத்துவ ரீதியில் நிரூபிக்கப்பட்டது. அத்துடன் உலகெங்கிலும் மருந்துகளுடன் பிராண்டு கடன் கூடிய பலகோடி மதிப்புள்ள கம்பெனியான ஜே.பி. கெமிகல்ஸ் அண்ட் ஃபார்மாசூடிகல்ஸிலிருந்து வருகிறது. டாக்டர் மாம் இன்றே கொண்டுவாருங்கள் இல்லத்திற்கு. உங்கள் குழந்தைகளுக்கு கொடுத்து அவர்களுக்கு உண்ணும் ஆவலைத் தூண்டுங்கள்.




டாக்டர் மாம் ஹெர்பல் வரிசைகள் உள்ளிட்டவை:
காஃப் ஸிரப் – இருமலுக்கு முற்றிலும் இதமானது
மற்றும் பெயின் பாம் – இயற்கையான இதமான
வலிநிவாரணி.

**டாக்டர் மாம் ஹெர்பல் குரோத் டானிக்**
**வளரும் குழந்தைக்கு ஒரு வரப்பிரசாதம்.**



# ஸ்ரீ காமகலா காமேஸ்வரி கோயில்
## ராஜகோபுர கும்பாபிஷேகம்

ராஜா ஹனுமந்த லாலா தெரு
திருவல்லிக்கேணி,
சென்னை – 600 005



திருவல்லிக்கேணியில் அமைந்துள்ள ஒரே சிவன் கோயில் என்று பெருமை பெற்று, நாளுக்கு நாள் அதிக எண்ணிக்கையில் பக்தர்களை கவர்ந்து அருள்பாலித்து வருகிறாள் அங்கு கோயில் கொண்டுள்ள ஸ்ரீ காமேஸ்வரி அம்பாள்.

பக்தகோடிகளின் நீண்ட நாள் விருப்பமான கோயில் ராஜகோபுரம் கட்டும் பணிக்காக ஆஸ்திக அன்பர்கள் பேராதரவுடன் ஒரு திருப்பணி கமிட்டி உருவாக்கப்பட்டுள்ளது.

மேற்படி திருப்பணிக்கு காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சார்ய ஸ்வாமிகள் பரமாச்சார்யாள் பரிபூரண ஆசி வழங்கியதுடன், "ஸ்ரீமுகத்தின்" வாயிலாக பொது மக்களுக்கு வேண்டுகோள் விடுத்து அருளியுள்ளார். மூன்று நிலையுடன் கட்டப் படவுள்ள ராஜகோபுர பணிகள் காஞ்சி மடத்தினை சேர்ந்த ஸ்ரீ சுப்பையா ஸ்தபதிகள் தலைமையில் தொடங்கப்பட்டுள்ளது.

இவ் விளம்பரத்தினை காணும் ஆஸ்திக அன்பர்கள் ராஜகோபுர திருப்பணிக்கு தாராளமாக நன்கொடை அனுப்பி இப் புனித பணியில் பங்குகொள்ள வேண்டுகிறோம். காசோலைகள் "Sri Kamakala Kameswari Temple Rajagopura Committee Madras" என்ற பெயரில் வழங்கவும். நன்கொடைகளுக்கு வருமான வரி சட்ட அறிக்கை எண் 8075 (F No 176/36/88 - II - AI 22.8.88) படி வரிவிலக்கு உண்டு.

T. R. கிருஷ்ணமூர்த்தி ஐயர்
தலைவர்
(சசி & சேகர்)

---

# சுபோதயா
## சிட் பண்ட்ஸ் (பி) லிமிடேட்.

110, கச்சேரி ரோடு, லஸ் கார்னர், மயிலாப்பூர்,
சென்னை-600 004, போன் : 76708.

சுபோதயா தனது சீரிய சேவையை சந்தாதாரர்களுக்குத் தொடர்ந்து அளித்து வருகிறது. வெள்ளி விழா ஆண்டை நோக்கி வீறுடன் நடை போடுகிறது.

உங்கள் ராசியான நிறுவனம் 'சுபோதயா'.

ரூ. 10,000/- முதல் ரூ. 1,00,000/- வரை மாதாந்திர குறுகிய கால மற்றும் நீண்ட கால சீட்டுகளை நடத்தி வருகிறது.

| AMOUNT | MONTH | Rs. |
|---|---|---|
| Rs. 1000 | 50 | 50,000 |
| Rs. 500 | 50 | 25,000 |
| Rs. 250 | 40 | 10,000 |

| AMOUNT | MONTH | Rs. |
|---|---|---|
| Rs. 500 | 30 | 15,000 |
| Rs. 400 | 25 | 10,000 |
| Rs. 1,000 | 25 | 25,000 |

புது சீட்டுகளில் சேர்ந்து கவர்ச்சிகரமான பரிசுகளைப் பெறுவீர்.

உங்கள் வளர்ச்சிக்கு எங்களிடம் சேமியுங்கள்!

# பங்கு மார்க்கெட்டுக்கு அந்த ஊசி போடாதீர்கள்!

வரலாறு காணாத அளவில் 1992 பிப்ரவரி-மார்ச்சில் பங்குகளின் விலையேற்றத்தைக் கண்டது இந்நாடு. காரண காரியமின்றிப் பலப்பல பங்குகளின் விலைகள் திடுதிப்புவென்று உயர்ந்தன. விலை இறக்கம் என்ற பேச்சுக்கே இடமில்லை என்று தோன்றியது. பங்குகளை வாங்க மக்கள் விழுந்தடித்துக் கொண்டு ஓடினார்கள். மைல் நீளத்துக்குக் க்யூவில் நின்றார்கள்.

இந்த விலை ஏற்றத்துக்கு உண்மையான காரணம் என்ன என்று யாருமே ஆராய வில்லை. நிதி அமைச்சரும் அமைச்சகமும் தங்களுடைய புதிய பொருளாதாரக் கொள்கையின் பின்விளைவுதான் இது என்று பெருமிதத்துடன் கூறினார்கள். அப்புறம்தான் பங்கு மார்க்கெட் ஊழல் விவகாரம் வெளிப்பட்டு ஹர்ஷத் மேத்தாவின் திருவிளையாடல்களும் புரிய வந்தன. பங்கு மார்க்கெட்டில் மளமளவென்று விலைகள் சரிய, லட்சக்கணக்கான சிறு முதலீட்டாளர்கள் பெரு நஷ்டம் அடைந்தனர். இதன் பிறகு அரசு விழித்துக் கொள்ள, ரிஸர்வ் வங்கி விழித்துக் கொள்ள, 'என்ன காரணம்?' 'யார் பொறுப்பு?' என்று நீண்ட விவாதங்கள் நடந்தன; இன்னும் முடியவில்லை!

பங்கு மார்க்கெட்டைக் கட்டுப்படுத்த எஸ்.இ.பி.ஐ. என்ற அமைப்பு உருவாக்கப்பட்டது. புதிய நெறிமுறைகள் வகுக்கப்பட்டன. ஆயினும் என்ன? சென்ற ஆண்டு மார்ச்சில் காணப்பட்ட பரபரப்பு போனது போனதுதான். பங்குகளில் வியாபாரம் நடப்பதே குதிரைக் கொம்பாகி, மார்க்கெட் டல் அடித்து, ஈ ஓட்டும் நிலைக்கு வந்து விட்டது.

புதிய தொழில்கள் தொடங்க, அல்லது விரிவாக்கத்துக்காக மக்களிடம் மூலதனம் கோருவதைப் பிரதான பங்கு மார்க்கெட் என்கிறோம். இந்த மார்க்கெட்டும் படுத்துவிட்டது. முன்பு எந்த ஒரு நிறுவனமானாலும் மக்களிடம் போனால் மூலதனம் நிச்சயம் கிடைக்கும் என்ற நிலை இருந்தது. இன்று இல்லை. மிகச் சிறந்த, பிரபலமான நிறுவனங்களுக்குக் கூட தேவைப்படும் மூலதனம் கிடைப்பதில்லை. காட்ரெஜ் நிறுவனத்தின் சோப்புகள் பற்றி யாருக்குத்தான் தெரியாது? முதன் முதலாக அந்நிறுவனம் மக்களிடம் மூலதனம் கோரி பங்கு மார்க்கெட்டுக்கு வந்தது. அவர்கள் கேட்டதை விட பல மடங்கு அதிக மூலதனம் வந்து குவியும் என்று எதிர்பார்க்கப்பட்டது! ஆனால் 'தப்பினோம் பிழைத்தோம்' என்ற அளவுக்குத்தான் கிடைத்தது. சம்பல் ரசாயன உர நிறுவனத்துடன் பிர்லா குழுப் சம்பந்தப்பட்டிருந்தும் கூட அது எதிர்பார்த்த மூலதனத்தில் 20 சதம்தான் கிடைத்தது! தேவைக்கு மேலேயே கிடைப்பது என்பது மிக அபூர்வமாகிவிட்டது.

இந்த நிலைக்கு முக்கியமான காரணம், பங்குகளின் மதிப்பு நிர்ணயத்தில் முன்பிருந்து வந்த கட்டுப்பாடுகள் போய் விட்டன என்பதே. அதாவது, பத்து ரூபாய் பங்கை என்ன விலைக்கு விநியோகிக்கலாம் என்பதற்குக் கட்டுப்பாடு முன்பு இருந்தது. இப்போது அது நீக்கப்பட்டு விடவே, பல தொழிலகங்களும் பேராசையோடு பங்குகளின் மதிப்பை அபரிமிதமாக உயர்த்தி நிர்ணயிக்கின்றன. பிரதான மார்க்கெட்டில் பங்குகளை விநியோகிக்கும் போதே ரூ. 50, ரூ. 60 என்று கூடுதல் விலைக்குப் பத்து ரூபாய் பங்குகளைத் தருகின்றன. இதனால் மக்களுக்கு நிறுவனங்களிடம் நம்பிக்கை போய்விட்டது. 'இவ்வளவு கூடுதல் விலை கொடுத்து வாங்கினால் நமக்கு என்ன ஆதாயம் கிடைக்கப் போகிறது?' என்று யோசிக்கிறார்கள். 'அரை வட்டி கூடக் கட்டி வராதே?' என்று கணக்குப் போடுகிறார்கள்.

கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டதற்கு முக்கிய காரணம், போட்டா போட்டி காரணமாக விலை நிர்ணயங்கள் நியாயமான அளவில் நிற்கும் என்பதே. ஆனால் பல்வேறு நிறுவனங்களும் பேராசையே பிரதான நோக்கு என்ற அளவில் செயல்பட ஆரம்பித்து, ஏமாற்றமும் அடைகின்றன. இதையெல்லாம் நிதி அமைச்சகத்துக்கு எடுத்துக் காட்டிய போதிலும் அவர்கள் தொழில் துறைக்கு உபதேசம் பண்ணுவதைத் தவிர வேறு ஒன்றும் உருப்படியாகச் செய்யவில்லை.

அரசும் சரி, தொழில் துறையும் சரி, விழித்துக் கொண்டு நிலைமையை நன்கு ஆராய்ந்து, முதலீட்டாளர்களின் அசிரத்தைக்கான காரணங்களைக் கண்டு பிடித்துச் சீர்திருத்த வேண்டும். உடனடியாக இதைச் செய்யாது போனால் ஏமாற்றம் சில பல தொழில் நிறுவனங்களுக்கு மட்டுமல்ல; உற்பத்தி பாதிப்பால் நாட்டுக்கே நஷ்டம்தான்.

- வி. கோபாலன்

# ஆத்மாவுக்கு ஆபத்து

அந்தப் பிரதேசம் அவனுக்குப் பரிச்சயம் இல்லாமல் இருந்தது.

எந்த ஊர்?

அல்லது எந்த நாடு?

அப்படியே அமர்ந்து ஆசுவாசப்படுத்திக் கொண்டு தன் நினைவைப் பயணம் போக விட்டான். இத்தனை வருடமாக மரத்துப் போன மூளை இயங்க ஆரம்பித்தது.

எத்தனை வருடங்கள்?

சாலையின் அருகாமைப் பகுதி அவன் இருந்த இடம். சுற்றிலும் நிதானமாய்ப் பார்த்தான். சந்தேகமில்லை. தன் முயற்சியின் வெற்றியைப் பாராட்டிக் கொண்டான்.

கனவிலும் நினைக்கவில்லை.

கனவேது?

எல்லாம் நினைவு தான்.

நினைவு மட்டும் தான்!

**சென்ற வாரம் படிக்காதவர்களுக்கு...**

ஆத்மா - மத்திய மாஸ்டர் கம்ப்யூட்டர். 'எல்லாம்' கண்காணிக்கும் எஜமான். பிரொஃபஸர் ஆர்யா மனித மூளை பற்றி ஆராய்ச்சி செய்து வருபவர். ZEL நகரில் உள்ள ஒரு கம்ப்யூட்டர், அதிகப்படியான உணவு வழங்குவதை 'ஆத்மா' கண்டுபிடிக்க, அதற்குக் காரணமான ஜுலன் தேசத்துரோகியாக அறிவிக்கப்பட்டு, 'பொது மக்கள் தண்டனை'க்கு ஆளாகிறான். ZEL சதுக்கத்தில் பொது மக்களால் ஜுலன் கொல்லப்பட்ட அதே சமயம், நகரின் ஓர் ஒதுக்குப்புற மூலையில் ஆத்மா அறியாத 'அவன்' பிரசன்னமாகிறான்!

## அத்யம் - ஆ

### குரு ''பெயர்ச்சி'' பூமி தாங்குமா?

ஆதவனின் வெளிச்சக் கதிர்களை இரவல் வாங்கி, உலகின் மேல் சந்திரன் பிரதிபலித்த அந்த அந்தி நேரத்தில் அவனுக்கு நினைவு வந்தது. சுற்றிலும் பார்த்தான். பசிப் பார்வை. கண்கள் வெறியுடன் காட்சிகளைக் கவர்ந்தன.

அவனின் சந்தோஷ மனம் குதித்தது. நிலத்தைத் தொட்டுப் பார்த்தான். குனிந்து முத்தமிட்டான். தூரத்து மரத்தை ஓடிச் சென்று கட்டிக் கொண்டான். கண்களில் நீர் வழிந்தது. எத்தனை வருடங்கள் கழித்துக் கிடைத்த காட்சி!

அவனின் நினைவுகள் புதிதாய் இயங்கின. மிகவும் அழுக்காய் உணர்ந்தான். சுமார் ஆறடி உயரம். கலைந்து பிசுபிசுத்த தலை. உடல் தோல் ஒருவிதமான பழுப்புக் கலரில் கருக்க டிஸைன் உண்டாக்கி இருந்தது. பார்ப்பதற்குக் கெட்ட கனவு போலிருந்தான்.

புதிய சிதோஷ்ணத்தால் உடம்பின் உறுப்புகள் உள்ளுக்குள் விளையாடிப் பார்த்தன. இயற்கையின் விதிகளுக்கு அடி பணிந்தன.

கசங்கிய மூளை அவன் பெயர் ஸ்ரீநிவாஸ குரு என்றது. அவன் எழுந்தான். தன்னைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். தொட முடிந்தது.

''அம்மா'' என்றான். சப்தம் வந்தது. கேட்க முடிந்தது.

மீண்டும் ''அம்மா'' என்று உரக்கக் கத்தினான்.

மீண்டும் கேட்க முடிந்தது.

சந்தோஷத்தில் உறைந்தான்.

சாலைக்கு வந்து நகர் நோக்கி நடந்தான். கார்கள் 150 கி.மீ. வேகத்தில் காற்றைக் கிழித்தன. 'உய்ங்' இசை பாடின.

நகரம் தன் கட்டட விரல்களால் வானத்தை வருடிக் கொண்டிருந்தது. வான மரத்தின் கட்டட விழுதுகள். வான டேக்ஸிகள் மேகங்களாய் மிதந்தன. நகரமே செயற்கை ஒளியில் பளபளத்துக் கொண்டிருந்தது. பரபரத்துக் கொண்டிருந்தது.

ஸ்ரீநிவாச குரு நடக்க, நடக்க உடலின் கலோரிகள் வீணாயின. மெடபாலிஸம் தயங்கியது.

எச்சரிக்கை! இன்னும் பத்தே வாரங்கள்! மிஸ்டர் P. விஜயகுமார், கம்ப்யூட்டரை ஓரங்கட்டி மரியாதையாக இளம் மனைவியுடன் தேநிலவு செல்லுங்கள்!

ரஜினி ராம்கி

ஸ்ரீ. குரு நடந்தான். நடந்தான்.

பசி வயிற்றில் விஸ்வரூபமெடுத்தது.

குரு நடந்தான். நடந்தான். நடந்தான்.

யானைத் தீப் பசி. உணவின் பிரவே சத்துக்கு வயிறு காத்திருந்தது.

ஜீரண அமிலங்கள் வயிற்றை அரித்தன.

உடம்பு வேகமாய்த் தளர ஆரம்பித்தது.

நிமிரென்று சோர்ந்து போனான்.

குரு அந்த உணவு நிலையம் முன் தள்ளாடி நின்றான். ஏராளமான பேர். எல்லாரும் ஐந்தடி உயரம். அளந்து வைத்தாற்போல. குருவைக் கூட்டம் ஒரு மாதிரி, நிமிர்ந்து பார்த்தது. அவர்கள் அடையாள அட்டையைக் கம்ப்யூட்டரில் செருக உணவு பாக்கெட் வெளிவந்தது.

நம் புலன்களுக்கும் சிந்தனைகளுக்கும் அப்பாற்பட்ட ஒரு ஞானம் இருக்கிறது.

அங்கே -

பார்வை போவதில்லை

பேச்சு நுழைவதில்லை

மனம் செல்வதில்லை

அதை எப்படி தொடுவதென்று

நமக்குத் தெரியாது.

நமக்குப் புரியாது.

- கேனோபநிஷத்

குருவும் கியூவில் சேர்ந்து கொண்டான். எல்லாரும் பாக்கெட் பாக்கெட்டாக உணவு பெற்றுப் போனார்கள். அடுத்தது குரு. கார்டில்லாமல் நிறை, கம்ப்யூட்டர் மௌனித்தது. அடுத்து நின்றவன் பேசக் கொடுத்தான்.

''உன் கார்டு எங்கே?''

''கார்டு?''

''மாத உணவட்டை.''

''இல்லை. நான் புதிது.''

''சாரி விலகு. முதலில் தலைமை உணவகத்தில் பதிவு செய்து கொள். பிறகுதான் உணவு.'' கம்ப்யூட்டர் அடுத்தவனுக்கு உணவளித்தது.

கண்முன் உணவு, பசி வளர்த்தது. வாயில் உமிழ்நீர் உண்டாக்கியது.

''சார் மிகவும் பசி. கொஞ்சம் தாங்களேன்.''

குரு ஏறத்தாழக் கெஞ்சினான்.

''சாரி. ஒரு மாதத்துக்கான கோட்டா இதுதான். பத்து பேர் ஒரு மாதம் சமாளிக்க வேண்டும். ஒரு மாதம்'' தோள் குலுக்கி மறுத்தான் அவன்.

குரு வெளியே வந்தான். வயிறு 'கபகப' என்றது. யாரிடமிருந்தாவது அடித்துப் பிடுங்கலாமா? உடம்பு ஒத்துழைக்க மறுத்தது. இதென்ன சோதனை? நரக வேதனை?





"டாக்டர் ரொம்ப பக்திமான் போலிருக்கு."
"எப்படிச் சொல்றே?"
"ஆபரேஷன் தியேட்டருக்குள் 'கடவுள் வாழ்த்து' பாடுற சத்தம் கேட்குதே!"

- வி. கெ. குமார்

குருவை வெகு நேரமாய்க் கவனித்த ஒருவன் அருகில் வந்தான்.

''உணவு வேண்டுமா?''

''எங்கே? எங்கே?'' குருவின் கண்கள் விரிந்தன.

''ஆயிரம் ரூ வேண்டும். தந்தால் ஒரு பாக்கெட் உனக்காகத் தருகிறேன்.''

''ரூவா?''

''ரூ. பணம்!''

''பணத்துக்கு எங்கே போவேன்?''

''எனில் உணவில்லை. ஆளை விடு.''

அவன் நகரலானான்.

''பசி. தாங்க முடியலை. உணவு முதலில். பிறகு ரூ தரேன்.''

''மன்னிக்க வேண்டும். முதலில் ரூ பிறகு உணவு.''

அவன் காரில் ஏறி கடிதில் மறைந்தான்.

குரு எரிச்சலுடன் வெளியே வந்தான். இப்போது தாகம் வேறு தவித்தது. நிறையக் கடைகள். நிறைய மக்கள்.

''கொஞ்சம் குடிக்கத் தண்ணீர் கிடைக்குமா?''

''தண்ணீர்? 200 மில்லி நூறு ரூ.''

உதவாத மக்கள். இரக்கம் மறந்த மக்கள்.

''தண்ணீருக்கும் ரூவா?''

''எதற்கும் ரூ!''

''தாகத்தில் உயிர் போயிடும் போல ருக்கு. கொஞ்சம் தாங்க.''

''நூறு ரூ. இல்லாட்டா போ!''

''எல்லாரும் இப்படி தயவு தாட்சண்யம் இல்லாமல் விரட்டினா எப்படி? ஏதாவது வேலை இருந்தா கொடு. செய்யத் தயார். கூலியா தண்ணீர் தந்தால் போதும்.''

''ஹஹ்ஹா! ஹஹ்ஹஹ்ஹா!!''

''ஏன் சிரிக்கிறாய்?''

''என்ன கேட்டாய்? வேலையா? அதெங்கே இருக்கு. வேலை பிடுங்கி எல்லாரையும் ஓய்வில்லம் அனுப்புகிறார்களே! அங்கு போயேன்.''

''ஓய்வில்லமா? அதெங்கேயிருக்கு? சீக்கிரம் சொல் பசி தாங்கலை.''

''பக்கத்துத் தெருவில் கூட ஒன்றுள் ளது. முயற்சி செய்.''

குரு ஏறத்தாழ தள்ளாடி ஓய்வில்லம் அடைந்த போது அனுமதி மறுக்கப்பட்டான்.

''உன் பிரஜை எண் அடையாள அட்டை இல்லாமல் அனுமதி இல்லை. தவிர வேலை இழந்ததற்கான சான்றிதழ் வேண்டும். பார்த்தால் வயதான மாதிரி இருக்கிறாய். பேசாமல் இறுதி இல்லம் போய் விடு. அதுதான் ஏற்றது.''

''இறுதி இல்லமா?''

''50 வயதானவர்கள் எல்லாம் கட்டாயமாக அங்கு அனுப்பப்படுவார்கள். இறுதி இல்லத்தில் 'எல்லாம்' கிடைக்கும் என்று கேள்வி. சொர்க்க வாழ்க்கை. ஆனால் உண்மையா தெரியாது. போனவர்கள் யாரும் திரும்பியதில்லை. ஒரு வழிப் பாதை.''

''இறுதி இல்லம் செல்ல வழி என்ன?''

''அங்கு கூட அடையாள அட்டை மற்றும் வயதுச் சான்றிதழ் இல்லாமல் போக முடியாது.''

''அடையாள அட்டை எங்கு கிடைக்கும்?''

''ஆத்மாவிடம் விண்ணப்பித்தால் கிடைக்கும்.''

''அதற்கும் ரூ வேண்டுமா?''

''பணம் பாதிக்காத ஒரே பொருள் ஆத்மா!''

''பொருளா?''

''ஆம்! ஆத்மா நம்மை ஆளும் மாஸ்டர் கம்ப்யூட்டர்.''

ரூ. ரூ. ரூ. இந்த உலகில் ரூ இல்லாமல் ஒன்றும் இல்லை. தண்ணீருக்குக் கூட ரூ. பாழாய்ப் போன உலகம்! இன்னும் மாறவே மாறாத உலகம். ரூவுக்கு அடிமையான உலகம். ரூவுக்கு அடிமையான மக்கள். இரக்கம் மறந்த மக்கள். மனிதாபிமானமற்ற மக்கள்.

இன்னும் திருந்தவில்லை -
மாட்டார்கள்!
குரு. புத்தி புகட்டு!
உன்னால் முடியும்!
சாதித்துக் காட்டு!
தப்பில்லை.
தனியொருவனுக்கு உணவில்லையெனில் ஜகத்தையழித்திடுவோம்!
அழி! அழி! அழி!

ஒரு முடிவுக்கு வந்த ஸ்ரீநிவாஸ குரு விகாரமாய்ச் சிரித்தபடி, கைகளை விரித்தபடி, சாலையின் நடுவே கால்களை அகட்டியபடி நின்றான்.

149 கி.மீ. வேகத்தில் வந்த, ப்ரொஃபஸர் ஆர்யாவின் உதவியாளர், - ஆராய்ச்சி மாணவி - சோட்டியின் மின்சாரக் காரின் முன்பக்க ரேடார் தடை உணர்ந்து, கம்ப்யூட்டருக்கு ஆணை பிறப்பிக்க - கார் குரு மேல் மோதாமல் குறுகிய இடைவெளியில் குலுங்காமல் நின்றது.

குருவைப் பார்த்த சோட்டியின் கண்கள் விரிந்தன.

(தொடரும்)



# இன்றைய சினிமா பற்றி

பெங்களூர், சதாசிவ நகரில் ஒதுக்குப்புறமான தெருவில், ஒதுக்குப்புறமான வீடு. உள்ளே ஊதுபத்தி மணம். விருதுகள் நிறைந்த பீரோ. மூலையில் தம்புரா. எதிரே எம்.ஜி.ஆர். வரவேற்கும் சரோஜாதேவி! இன்றைய கன்னடத் திரை உலகம் குறித்துப் பேசினார்.

''கன்னடத்தில் அவ்வப்போது சில உன்னதமான படங்கள் வருகின்றன. உதாரணமாக தபரண கதா. தேசிய விருது பெற்ற படம். அப்புறம் கிரிஷ் கர்னாடின் சமீபத்திய சில படங்கள்...''

''நல்ல படங்கள் என்றால், விருதுப் படங்களை மட்டும் கேட்கவில்லை... கமர்ஷியல் நோக்கில் எடுக்கப்பட்டபோதிலும் சிறப்பான கதையோடு, கலை அம்சங்களோடு சக்ஸஸ்ஃபுல்லாக ஓடின படங்கள்...?''

''சக்ஸஸ்ஃபுல்லாக ஓடின படங்கள் இருக்கின்றன. சிறப்பான கதை... என்ன சொல்வது? இங்கே சினிமா துறையைச் சேர்ந்தவர்கள் எல்லாம் இப்போது கதைகளுக்காகப் பிரயத்தனப்படுவதே இல்லை. ரொம்ப சுலபம். எந்த மொழியிலாவது ஏதாவது நல்ல படம் வருகிறதா என்று பார்த்து, உடனே அதை சுவீகரித்துக் கொண்டு விடுகிறார்கள். அப்படிக் கிடைக்கிற கதையை 'உல்ட்டா' செய்வது சிரமமாயிருக்கிறபட்சத்தில் ரீமேக் என்று அதே கதையின் கன்னட 'வர்ஷன்'. அதுவும் சிரமம் என்றால் இருக்கவே இருக்கிறது - டப்பிங்! இப்பவெல்லாம் இந்த சிரமம் கூட இல்லை. நேரடியாக அந்தந்த மொழிப் படங்கள் அப்படியே திரையிடப்படுகின்றன.''

''ஜனங்கள் விரும்புவதால்தானே அப்படி?''

''அப்படிச் சொல்ல முடியாது. நல்ல கதைகளை நம்மாலேயே படமாக்க முடிந்தால் பிறகு ஏன் அடுத்த மொழிக்காரரை அண்டி நிற்க வேண்டும்?''

''அப்படியானால் இங்கு இருக்கிறவர்களால் உருப்படியாக ஒன்றும் செய்ய முடிகிறதில்லை என்று சொல்ல வருகிறீர்களா?''

''நோ. நோ. பெரும்பாலானவர்கள் சினிமாவை வெறும் பிஸினஸாகப் பார்ப்பதால்தான் இந்தக் கோளாறு. உண்மையாகவே நல்ல படங்கள் தருகிறவர்களும் இருக்கிறார்கள். நாகேந்திர பாபு, நாகபூஷணம் போன்ற டைரக்டர்கள் எப்போதும் தரமான படங்கள் தருவதைக் குறிக்கோளாகக் கொண்டவர்கள்.''

''நாங்கள் விசாரித்ததில் இங்கே

# நேற்றைய நட்சத்திரம்



## அருள்வாக்கு

'நாம் விழித்துக் கொண்டிருப்பது வேலை செய்வதற்காக. நன்றாகத் தூங்குவது வேலை செய்த சிரமமெல்லாம் போவதற்காக. இந்த இரண்டுமே போதுமே. ஸ்வப்னம் எதற்காக இருக்கிறது?' என்று யோசித்துப் பார்த்தேன். ஈச்வரன் எங்கும் இருக்கிறார், அவர் அத்வைத ப்ரம்மம், எல்லாம் ஆத்ம ஸ்வரூபம் என்பதை நிரூபித்துக் காட்டுவதற்கு த்ருஷ்டாந்தமாகவே இந்த ஸ்வப்னத்தை அவர் உண்டாக்கி இருக்கிறார் என்று தோன்றியது. கனவு காண்பதற்கு வேறு ஒரு பிரயோஜனமும் இல்லை. இந்த லோகம் நமக்குப் பலவாகத் தோன்றுவது ஸ்வப்னத்தைப் போல இருக்கிறது. ஸ்வப்னத்தில் என்ன என்னவோ கஷ்டங்களும் ஸுகங்களும் வருவதாகத் தோன்றுகின்றன. ஸ்வப்னம் முடிந்தால் ஒன்றும் இருக்கிறதில்லை. ஸ்வப்னம் பார்த்த பொழுது இருந்ததாகத் தோன்றிய உடம்பு கூட இருப்பதில்லை. இப்படி ஸ்வப்னம் கண்டோம் என்று அறிந்து கொண்ட ஒருவன்தான் மிச்சம். இந்த ஒரே ஒருவனின் எண்ணந்தான் கனவுலகில் அவன் கண்ட அத்தனை பேர்களும், அத்தனை வஸ்துக்களும். ஸ்வப்னத்தில் இருந்த இவை எல்லாம் விழிப்பிலே போய் விடுகின்றன. இதே மாதிரி ப்ரபஞ்ச ஸ்வப்னத்திலிருந்து நாம் விழித்துக் கொண்டால், பிரபஞ்சத்திலுள்ள ஸகல வஸ்துக்களும் பொய்யாகப் போய், அவற்றைக் கண்ட அறிவு ஒன்றுதான் மிஞ்சும். ஸத்யமான வஸ்து அதுதான். அதற்குத்தான் அத்வைதம் என்று பெயர். ஆயிரக்கணக்காகப் பார்ப்பது த்வைதம். நாமெல்லோரும் அத்வைதத்தை நம்புகிறவர்கள். ஆயினும் இப்போது அநுபவத்தில் த்வைதமாகிய கனவு காண்கிறோம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.



'ரோஜா' ஓடின அளவுக்கு எந்த ஒரு கன்னடப் படமும் ஓடவில்லை என்கிறார்களே?''

''ரோஜா ஓர் அற்புதமான படம். அது ஓடுவதில் வியப்பில்லை. இந்த இடத்தில் ஒரு விஷயம் சொல்ல வேண்டும். இந்த வருஷ நேஷனல் அவார்ட் படங்கள் போட்டிக் குழுவில் ஜூரியாக நானும் இருந்தேன். என்னைத் தவிர அங்கு யாருமே ரோஜாவை விருதுக்குரிய படமாகச் சொல்லவேயில்லை! வெறும் காஷ்மீர் பிரச்னைதானே என்றார்கள்! எத்தனை சண்டை போட்டு அந்த விருதை அதற்குக் கிடைக்கச் செய்தேன் தெரியுமா? எதற்குச் சொல்கிறேன் என்றால், நல்ல படங்களுக்கே இப்படியான நிலைமை இங்கு! மற்றவற்றைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். ஆனால் ரோஜா மட்டும்தான் ஓடின படம் என்பதை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். 'ஜீவன சைத்ரா' என்றொரு படம் ராஜ்குமார் நடித்தது. ஒரு வருஷத்துக்கு மேலாக ஓடிக் கொண்டிருக்கிறது.''

''டெக்னிகலாக, வளர்ச்சி எப்படி இருக்கிறது?''

''முன்னேற்றம்... இல்லாமல் இல்லை. ஆனால் ஒன்று. ஏனோ தெரியவில்லை, இருட்டில் படமெடுப்பது இப்போது ஒரு ஃபேஷனாகி விட்டது. எதைக் காட்டினாலும் dim ஆகக் காட்டி, அதற்கு 'டொய்ங்' என்றொரு மியூஸிக் கொடுத்து... இது பிரும்மாண்டமான டெக்னிகல் சாதனையா? ஹாரிபிள்.''

''இப்போது ஏதாவது படங்களில் நடிக்கிறீர்களா?''

''செலக்டாகச் செய்கிறேன். தமிழில் சிவாஜியுடன் 'பாரம்பரியம்' படம் - அது தான் கடைசியாக நடித்தது. கன்னடத்திலும் கூட குறைத்துக் கொண்டு விட்டேன். தேவர் மகனில் சிவாஜிக்குக் கிடைத்த ரோல் மாதிரி எனக்குக் கிடைத்தால் செய்வேன். சும்மா வந்து போவதை விட நடிக்காமலே இருக்கலாம் அல்லவா?''

''எப்படி பின்னே பொழுது போகிறது?''

''நேரம் போதவில்லை! இங்கே இரண்டு ஹோட்டல்கள் நடத்துகிறேன். மற்றும் ஒரு டூல்ஸ் ஃபாக்டரி, வேறு சில பொறுப்புகள். தவிர பல பொது அமைப்புகளில் ஆக்டிவ் மெம்பராகச் செயல்படுகிறேன். இதெல்லாம் தவிர என் குடும்பத்தினருடன் அதிக நேரம் செலவிடுவதை விரும்புகிறேன். சரோஜாதேவி, குடும்பத்தைக் கவனிப்பதைத் தவிர மீதி எல்லாம் செய்கிறாள் என்று யாரும் சொல்லி விடக் கூடாதல்லவா?''

- கிச்சா



# அபிராமியின் அட்டிகை

வானொலி அண்ணா

**கூத்தபிரான்**

எழுதும்

புதிய தொடர்கதை

ஆரம்பம்

"இன்னும் இரண்டொரு நாளில் டெல்லியிலிருந்து நம் விடுதிக்குப் புதிதாக ஒரு சிறுமி வரப் போகிறாள்!"

"டெல்லியிலிருந்தா? தனியாகவா?"

"தான் ஒரு அனாதையென்று கடிதத்தில் எழுதியிருக்கிறாள். அதனால் அநேகமாகத் தனியாகத்தான் வருவாள்."

# கோகுலம்

ஜூலை இதழில்...

சங்கனுக்கு உதவிய தங்கப் பறவை!!

- வண்ணப் படக்கதை



உள்ளூர் ஏஜெண்டிடம் 'கோகுலம்' பிரதிக்கு முன்னதாகச் சொல்லி வையுங்கள்!

# பனிப் பாறை

ஆபஸ்தமேன்

'**எ**ப்படிப்பட்ட போலியான வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கிறோம். கடவுளே! இதிலிருந்து விடுதலை கிடையாதா? மனத்திலிருந்த லட்சியங்கள், கனவுகள் - எல்லாம் சரிந்து விழுந்து விட்டன. கோவில் என்று நினைத்துக் கொண்டு வந்த இடம் கேவலம் சாத்தானின் பூமியா!'

இப்படியெல்லாம் எண்ணும்போதே ராதாவின் மனத்திலிருந்த பாரம் இமையோரங்களின் வழியே கடுநீராக வழிந்தது.

' 'ராமன்' என்ற புனிதமான பெயரை வைத்துக் கொண்டு இத்தனை பொய்களா? பித்தலாட்டங்களா?'

மணி பத்தடித்து விட்டிருந்தது. அவன் இன்னமும் வரவில்லை. ஜன்னல் வழியே வெளியே பார்த்தாள். இருண்டு கிடந்தது - அவள் உள்ளத்தைப் போலவே.

அன்று காலை....

**நூ**லகத்துக்குச் சென்று புத்தகங்கள் எடுத்துக் கொண்டு வரும் வழியில் 'போலார் கன்ஸ்டிரக்‌ஷன்ஸ்' என்ற போர்டைப் பார்த்து ஒருகணம் நின்றாள்.

ஓர் அழகான 'டிரைவ் இன் ரெஸ்டாரன்டு'க்கான வேலை நடந்து கொண்டிருந்தது. நித்யா நின்றபடியே மேற்பார்வையிடுவதைப் பார்த்தாள். சில கணங்கள் நின்று பார்த்த போது நித்யாவைப் பற்றி ராமன் கூறியவை - அவற்றின் பாதிப்பால் தனது மனத்தில் ஏற்பட்ட அபிப்பிராயங்கள் எல்லாமே தவறாக இருக்குமோ என்ற இலேசான சந்தேகம் தலைதூக்கியது. இவள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே நித்யா வெளியே வந்து அவசரமாக ஒரு ஆட்டோவில் ஏறிக் கொண்டு போனாள்.

அவள் போன பிறகு ராதா மெள்ள நடந்து வேலைகள் நடக்கும் இடத்தை அடைந்தாள். மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்த ஜெகன்னாதன் இவளை அடையாளம் கண்டுகொள்ளவில்லை.

''என்ன வேண்டும்'' என்று பவ்யமாக ஆங்கிலத்தில் கேட்டார்.





ராதா ஒரே ஒரு கணம் என்ன பேசுவது என்று தெரியாமல் தவித்தாலும், மனத்தில் திடீரென்று ஓர் எண்ணம் உதயமாக, உற்சாகத்துடன் பேசினாள். ''நான் ஒரு ஃப்ரீலான்ஸ் ரைட்டர். வேலைல இருக்கற பெண்களைப் பற்றி ஆராய்ச்சிக் கட்டுரை எழுதிக்கிட்டிருக்கேன். இந்தக் கம்பெனியை நிர்வாகம் பண்றது ஒரு பெண் என்று கேள்விப்பட்டேன். உங்க கம்பெனியைப் பற்றிச் சற்று விரிவாகக் கூற முடியுமா?''

ஜகன்னாதன் மிகுந்த மகிழ்ச்சியுடன் அங்கிருந்த மடக்கு நாற்காலியில் அவளை உட்காரச் சொன்னார்.

நித்யாவைப் பற்றி, அவள் திறமையைப் பற்றி, அவளைத் தவிக்க வைக்கும் சிக்கல்கள், இடையூறுகள் - இவற்றை எல்லாம் எதிர்த்து, திடமான மனோபாவத்துடன் செயலாற்றிவருவது பற்றி - எல்லாம் கூறினார்.

கேட்கக் கேட்க ராதாவின் பிரமிப்பு அதிகமாயிற்று. இவளா ராமன் கூறிய நித்யா? நிச்சயமாக இல்லை!

ஜகன்னாதன் பேச்சைச் சற்று நிறுத்தின போது கேட்டாள் -

''ஒரே ஒரு சந்தேகம்...''

''கேளுங்கம்மா... என்ன வேணும்னாலும் கேளுங்க'' - அவருக்கு உண்மையிலேயே இந்தப் பெண்ணை மனத்துக்குள் மிகவும் பிடித்துப் போயிற்று.

''இந்தக் கம்பெனியில மொதல்ல மிஸ் நித்யாவோட தம்பியும் இருந்ததாகக் கேள்விப்பட்டேன். அவரோட திறமையை இவள் வெளியே தெரியவிடாம அமுக்கி விட்டதாகவும், அதனால் மனம் நொந்து போய் அவர் வெளியே போய் விட்டதாகவும்...'' அவள் முடிப்ப

தற்கு முன்னே ஜகன்னாதன் உரக்கச் சிரித்தார்.

''இது என்ன பைத்தியக்காரத்தனமாக இருக்கு! பெருமாளே! என்ன விளையாட்டப்பா விளையாடறே?'' மெல்லிய குரலில் - ''அந்த ராமன் ஒண்ணுக்குமே பிரயோசனமில்லாதவன்'' என்றார்.

ராதா உறைந்து போனாள்.

''எப்படியோ தப்பித் தவறி பி.எஸ்.ஸி பாஸ் பண்ணிட்டான். சமர்த்து கிடையாது. அவனுக்கு யாரு வேலை குடுப்பா? சொல்லு? எப்பப் பாரு கையில சினிமா புத்தகம்தான்...'' சற்று நிறுத்தியவர், தான் அதிகப்படியான வார்த்தைகளைக் கொட்டி விட்டோமோ என்று தயங்கினார்.

ராதா அவருடைய மனநிலையைப் புரிந்து கொண்டது போல் -

''பயப்படாதீங்க சார். இதையெல்லாம் நான் 'ஆஃப் த ரெக்கார்டா' வெச்சிக்கறேன். எனக்கு இந்த லேடியைப் பற்றிக் கேட்க பிரமிப்பா இருக்கு சார்.''

''ஆமாம்மா. நித்யா ஆயிரத்துல ஒருத்தி. அந்த விகவம் ராமனுக்கு என்னெல்லாமோ ஆசை காட்டி இங்கேந்து கூட்டிண்டு போயிட்டான். நித்யாவுக்கு வர்ற கான்டிராக்டுகளையெல்லாம் கலைக்கறாங்க. கான்க்ரீட் மெஷினைக் கூட வாடகைக்கு வராம தடுக்கப் பாத்தாங்க. என்னவோம்மா தர்மத்தின் பக்கத்துல பெருமாள் இருப்பார்னு நான் நம்பறேன்.''

ராதா எழுந்தாள்.

''சரிங்க. நேரமாயிடுத்து. நான் வர்றேங்க. இந்த விவரங்களையெல்லாம் சொன்னதுக்கு ரொம்ப நன்றிங்க.''

நடந்தாள். நடந்த வழிநெடுக நித்யாவை நினைத்து மனம் பிரமித்தது.

'அவ ரொம்ப ராங்கி பிடிச்சவ ராதி. விகவம் அவளைக் கல்யாணம் பண்ணிக்க ரொம்ப ஆசைப் பட்டார். இந்த ராங்கிக்காரி மாட்டேன்னுட்டா. என்னவோ துர்காவுக்கு ஒரு நல்ல வாழ்க்கை அமைஞ்சு போச்சு.'

துர்காவை நினைக்கையில் மனம் கூசியது. எம்.எஸ்.ஸி பட்டதாரி. ஆனா லும் எத்தகைய அருவருப்பான, நாலாந்தர ரசனைகள்! படிப்புக்கும் ரசனைக்கும் சம்பந்தமில்லைதான்...

வீட்டை அடைந்த போது கார் போர்டிகோவில் நின்று கொண்டிருந்தது. விகவத்தின் கம்பெனிக் கார்.

பார்வதி ஹாலில் உட்கார்ந்து கொண்டு டேப் ரிகார்டரில் 'ராதா மாதவம்' கேட்டுக் கொண்டிருந்தாள்.

''ராதா, ராமன் கூட யாரோ வந்திருக்காம்மா. காப்பி கீபி வேணுமோ என்னமோ. கேட்டுண்டு வர்றியா?''

''இதோ போறேம்மா.''

அவள் மாடிப்படியேறினாள். வளைவில் திரும்பி இரண்டே படிகள் இருந்ததும் ராமனின் குரல் சற்று அதிகாரமாக ஒலிப்பது போல் தோன்றவே, நின்றாள்.

''என்ன சொக்கலிங்கம்? நான் இப்போ உங்களைக் கூட்டிண்டு வந்தது ஒங்க மகளோட கல்யாணத்தைப் பற்றிக் கேட்கத்தான். ரொம்ப கஷ்டப்படறீங்கன்னு கேள்விப்பட்டேன்.''

''ஆமாய்யா. மருமகப் புள்ள வூடு கொஞ்சம் வசதியான இடம். பொண்ணை நல்லா வச்சுப்பாங்கன்னு ஆழம் தெரியாம காலை உட்டுட்டேன்.''

''பரவாயில்ல சொக்கலிங்கம். ஒங்களை எனக்கு ரொம்ப நாளாவே தெரியுமில்லை? இதோ இந்த 'கவர்ல' அஞ்சாயிரம் இருக்கு. என்னோட பரிசா இதை வச்சுக்குங்க.''

பிறகு அவன் கிசுகிசுப்பான குரலில் பேசியது ஒன்றும் அவள் செவிகளில் விழவில்லை. கீழே இறங்கிப் போய் இரண்டு கோப்பைகளில் போர்ன்விடா கலந்து கொண்டு வந்தாள்.

டிரேயை அவர்கள் முன் வைக்கும் போது சொக்கலிங்கம் என்ற அந்தப் புதிய மனிதனின் முகம் சற்றுக் கலவரமடைந்திருந்தது போல் அவளுக்குத் தோன்றியது.

''இவ என்னோட மனைவி - ராதா.''

அவள் அவரைப் பார்த்து வணக்கம் என்றாள்.

''ராதா - இது மிஸ்டர் சொக்கலிங்கம். சிமெண்ட் டீலர்.''

பிறகு இருவருமாக வெளியே சென்ற போது ராமன் அவரிடம் கூறிய வார்த்தைகள் அவள் செவிகளில் விழுந்தன.

''அப்போ! நான் சொன்னதெல்லாம் ஞாபகத்துல வைச்சுக்குங்க. ஒங்க பொண்ணு கல்யாணம் நல்லபடியா நடக்கட்டும். நீங்க மனசாட்சியைக் கொஞ்சம் கழற்றி வையுங்க.''

மனைவி : நேற்று தான் பக்கத்து வீட்டுக்காரர் ஒரு வாரமா இடுப்பு வலின்னு உங்ககிட்டப் புலம்பிட்டுப் போனாரு; இன்னிக்கு மறுபடியும் என்னமோ புலம்பிட்டுப் போறாரே, என்ன?

கணவன் : எட்டு நாளா இடுப்பு வலின்னு!

– உ. ராஜாஜி



# மாணவர்கள் நடத்திய மாதிரிச் சட்டசபை!



● கரும்பலகைமேல்
காயங்கள் -
இரத்தம் வடித்தன எழுத்துக்கள்.

மின்விசிறித்தகடுகளில்
முன்மொழியப்பட்டன
ஒடுக்கங்கள், வளைவுகள்.

நிலைகுலைந்து
விழுந்த வகுப்பறைக்
கதவு
கவனஈர்ப்புத் தீர்மானம்
எழுப்பியது.

புத்தகம், குறிப்பேடுகளில்
ஆயுதசாலைகள்!
வேக அம்புகள், ஈட்டிகள்
புறப்பட்டன!
எழுதுகோல்கள், ஏவுகணைகள்.

விரிவாக
விவாதம் புரிய
இடம் தேவைப்பட்டதால்
வெளியேற்றப்பட்டன மேசை
நாற்காலிகள்.

வீங்கிய கோஷங்கள்
விரச பாவங்கள்...

சட்டைக் கிழிசல்களில்
முகம் பார்த்துக் கொண்டது
ஜனநாயகம்!

சபை நடவடிக்கைக்குத்
தடையாக இருப்பதாகப்
பொட்டலங்கட்டி வெளியே
போடப்பட்டன
அரசியல் சட்டத்தின் அத்தனை
பிரிவுகளும்!

● மாதிரிச் சட்டசபையை
மாணவர்கள்
நடத்தி முடிக்கவில்லை
பள்ளிக்கூட இறுதிமணியை
அடித்துவிட்டார்கள்!

- தமிழன்பன்

இது ஏதோ விபரீதமான செயலுக்கான அஸ்திவாரம் என்று உள்ளுணர்வு கூறியது.

மனத்தால் அவள் ராமனிடமிருந்து விலகி எத்தனையோ நாட்களாகி விட்டன. இயந்திரம் போல் அவனுக்கு உடம்பை மட்டும் கொடுத்துக் கொண்டிருந்தாள். சில நேரங்களில், மனத்தில் விரிசல் ஏற்பட்ட பிறகும் இப்படி வாழத்தான் வேண்டுமா, என்ற எண்ணம் ஏற்படாமல் இல்லை. அது அவளுக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது. பைத்தியம் பிடித்து விடுமோ என்ற பயம் கூட ஏற்பட்டது.

லட்சியங்கள் நிறைந்த வாழ்க்கைக்கு அடித்தளம் போட்டாள். ஆனால் இன்று எத்தனை பெரிய ஏமாற்றம்!

அன்றிரவு ராமன் அவளை அணைத்த போது அருவருப்புடன் நெளிந்தாள்.

''என்ன இது? நானும் பார்த்துண்டே வர்றேன் - வர வர ஒட்டுதலே இல்லாம, மூணாம் மனுஷன்கிட்டே பழகறது போலப் பழகறே!''

அவள் பதிலேதும் கூறவில்லை. மனசு மட்டும் உள்ளுக்குள்ளே ரகசியமாக முணு முணுத்தது.

'இந்த உடம்பைத்தானே உன்னால் ஆள முடியும்! என்னோட மனசும் இதயமும் எனக்கு மட்டுமே சொந்தம்.'

அவளுடைய ஜடத்தனம் அவனை ஆத்திரப்படுத்தியது. பழிவாங்குவது போல் அவளை இறுக்கினான்.

அவன் உறங்கிய பிறகு உடைகளைச் சரிசெய்து கொண்டு எழுந்து ஜன்னலருகே போய் நின்று கொண்டாள். கண்களிலிருந்து நீர் பிரவாகமாகப் பொழிந்தது.

லட்சியமில்லாத வாழ்க்கை வாழ மனசு ஒப்பவில்லை. கீழ்த்தரமான எண்ணங்களில், செயல்களில் மனசு ஒட்டவில்லை.

தெய்வமே! இன்னும் எத்தனை நாட்கள்!

(தொடரும்)

# ஜாமீன்

**ர**யில் குலுக்கலுடன் சென்று கொண்டிருந்தது.

எனக்குப் பயணம் பிடிக்கும். ரயில் பயணம் மிகவும் பிடிக்கும். கம்பார்ட்மெண்டின் மெலிதான குலுக்கல்... ஜன்னல் வழியே வரும் தெடி.. பக்கத்தில் அமர்ந்து பயணம் செய்யும் கலவையான மனிதர்கள்...

ஆனால் இப்போது எதையுமே ரசிக்க முடியவில்லை. காரணம் மனசு. நைந்து போய் விட்டது. ஏமாற்றத்தைத் தாங்கிக் கொள்ளலாம். துரோகத்தைத் தாங்கிக் கொள்ள முடியாது - நம்பிக்கை துரோகம்.

''சீனிவாசன் இப்படி பண்ணுவான்னு நான் எதிர்பார்க்கல்லப்பா.. திட்டம் போட்டுச் செஞ்சிருக்கான்.. ஒன் குடும்பத்துல ஒருத்தனா இருந்தவன் இப்படி பண்ணிட்டானே.. தயங்காம அவன் காட்டின எடத்துல ஜாமீன் கையெழுத்துப் போட்ட... லட்ச ரூபாய்! இப்ப என்னப்பா பண்ணப் போற...?''

''பார்ப்பம்'' என்று நான் போன வாரம் ரகுவிடம் சொன்ன போதும், யாரையும் என்னால் பார்க்க முடியவில்லை.

''வேணாம்... வேணாம்னு அடிச்சிக்கிட்டேனே.. அண்ணன் தம்பிங்களே ஒருத்தருக்கு ஒருத்தர் ஜாமீன் போடத் தயங்கற காலம்... ரெண்டு வருஷ பழக்கத்தை வச்சி கையெழுத்துப் போட்டு இப்படி ஏமாந்துட்டீங்களே... எனக்குப் படபடங்குதுங்க.. என்ன பண்றது.. லட்ச ரூபாய்!'' ஜானகி அழுது தீர்த்து விட்டாள்.

**இ**ரண்டு வருடப் பழக்கம். பழக்கமா அது? எவ்வளவு நெருக்கம்?

என் புத்தகக் கடைக்குப் பக்கத்தில் சீனிவாசன் ஃபைனான்ஸ் ஆரம்பித்த தினம் எனக்குப் பகைமையாக நினைவில் இருக்கிறது. நிதி நிறுவனம்... ஆகவே எப்போதாவது யாராவது வருவார்கள். சீனிவாசன் பெரும்பாலும் என் கடையில். சம வயது. வலுவான சிநேகம் உருவானது. அவ்வப்போது வீடு தேடி வரும் அளவுக்கு.

''என்ன ராமநாதா... வீட்ல ஒரு டேப்ரிகார்டர் இல்ல.. நல்லாவா இருக்கு! ஒன் டாட்டர் சினிமா பாட்டு விரும்பிக் கேட்பா போலிருக்கு...''

அடுத்த வாரமே புத்தம் புதிய டேப்ரிகார்டர் வீட்டுக்கு வந்தது.

''இப்ப ஏன் சீனி இது... என்கிட்டே பணம் இல்லப்பா...''

''நான் ஒன்கிட்ட பணம் கேட்டனா...?''

உண்மையான பேச்சு. மறுக்க முடியாத பேச்சு.

''அட போங்க ராமநாதன்... இந்தக் காலத்துல போய் பிளாக் அண்ட் ஒயிட் டீ.வி. வச்சிருக்கீங்க. கலர்ல பாருங்க... இதுல பார்த்தா கண்ணு போயிடும்.''

இரண்டாவது நாளே கலர் டீ.வி. வீட்டுக்கு வந்தது.

அவனைத் தடுக்க முடியவில்லை. மறுக்க முடியவில்லை. கொண்டு வந்து வைத்த பொருளைத் திருப்பிக் கொடுக்க முடியவில்லை.

''அட்டகாசம்ப்பா'' என்று டீ.வியைப் பார்த்து அபிநயா மகிழ்ச்சியாகக் கூறிய பிறகு என்னால் எதுவும் செய்ய முடியவில்லை.

கஷ்டத்தோடு கஷ்டமாக, கொஞ்சம் கொஞ்சமாகப் பணம் தந்து விட்டேன்.

''எங்கயிருந்தோ வந்து இங்க இருக்காரு.. தனியா வேற இருக்காரு.. நாளும் கிழமையுமா ஓட்டல்ல சாப்பிட்டா பார்க்கிறவங்க உங்கள என்ன நினைப்பாங்க. மத்தியானம் நம்ம வீட்டுக்குச் சாப்பிடக் கூப்பிடுங்க...''

- விசேஷ தினங்களில் அவனுக்குச் சாப்பாடு என் வீட்டில்தான். ஜானகி கையால் தான் சீனிவாசன் சாப்பிட்டான். சாப்பாடு போட்ட அந்த கைக்குத்தான் துரோகம்!

**''நீ** சொன்னா கிடைச்சிடும் ராமநாதா... இப்ப கொஞ்சம் அதிகமா பணம் தேவைப்படுது... நல்ல சீசன்.. தைரியமா இன்வெஸ்ட் பண்ணலாம்... பணத்தை உடனே திரும்ப எடுத்திடலாம்... என்னை நம்பி லட்ச' ரூபாய் கொடுக்க மாட்டேங்கிறாங்க... இந்த உதவியை மட்டும் செய் ராமநாதா...''

செய்தேன். அடுத்த வாரமே லட்ச ரூபாய் கடனுக்கு ஜாமீன் கையெழுத்துப் போட்டேன்.

இரண்டு வாரம் ஒழுங்காகத் தவணை கட்டிய சீனிவாசன்... மூன்றாவது வாரம் முழுதும் கடை திறக்கவில்லை. எங்கே போய் விட்டான் என்று அவன் தங்கியிருந்த வீட்டைப் போய்ப் பார்த்த போது... காலி பண்ணிட்டுப் போய் விட்டதாகச் சொல்ல... தூக்கி வாரிப்

போட்டது எனக்கு!

வருவான்... வருவான் என்று ஒரு மாதம் காத்திருந்து... அவன் சொல்லி யிருந்த ஊருக்கெல்லாம் சென்று பார்த்து, ''அப்படி இங்க யாருமே இல்லையே.''

கலங்கிய மனத்துடன் போலீஸ் ஸ்டேஷன் சென்ற போது, ''எங்க ஸார் புடிக்கிறது. திட்டம் போட்டுச் செய்ய றாங்க. விவரமான ஆளு. நீங்களே ஏமாந் திருக்கீங்க! உங்களுக்கு அதிர்ஷ்டம் இருந்து... எங்கயாச்சும் மாட்டினா உங்க பணம் கிடைக்கலாம்.''

மனம் ரணமாயிற்று. ஏமாந்து வி'டதை விட... எப்படி இதைப் போல் செய்ய முடிகிறது என்ற வியப்புத்தான் மேலோங்கி நின்றது. இவ்வளவு நெருங்கிப் பழகி.. மனிதர்களுக்கு எப்படி இப்படிப் பட்ட எண்ணங்கள் வருகின்றன? நான்தான் ஏமாளியோ... உலகம் புரியாமல் இருக் கிறேனோ.. டேப் ரிகார்டரையும்... டீவி யையும் பார்த்துப் பிரமித்துப் போய் ஏமாந்து விட்டேனோ?

இரண்டு வருடங்கள் சிநேகமாய்ப் பழகி... ஒன்றாகச் சாப்பிட்டு.. எல்லாம் பொய்யா? இப்படி ஒரு நயவஞ்சகத் திட்டத்தை மனத்தில் வைத்துக் கொண்டு எத்தனை பாசாங்கு...?

முதல் தடவையா ஏமாறுகிறேன்...? இல்லை.

சென்ற மாதம் ஒரு நாள் மதியம் கடையில் அமர்ந்திருந்த போது ஒருவர் தயங்கித் தயங்கிக் கடைக்குள் வந்தார். வயதானவர். கண்ணியமான தோற்றம்.

மனைவியோடு ஒரு திருமணத்துக்கு வந்து திரும்புவதாகவும், பேருந்து நிலையத் தில் பர்ஸ் களவு போய் விட்டதாகவும் கையில் சல்லிக்காசு இல்லாமல் சென்னை போய்ச் சேர நூறு ரூபாய் வேண்டுமென்றும் உருக்கமாகக் கூறினார்.

நான் குழம்பிப் போய் யோசனையாய் அமர்ந்திருக்க... தான் பிராட்வேயில் கண்





ணாடிக் கடை வைத்திருப்பதாகக் கூறியவர் பட்டென்று நான் அணிந்திருந்த கண்ணாடியை உருவி... கண்ணாடியின் பவரைச் சொன்னதோடு, ஃபிரேமை லேசாக வளைத்தால் சரியாக உட்காரும் என்று கூற... நம்பினேன்.

டீ வாங்கிக் கொடுத்து... நூறு ரூபாய் பணமும் கொடுத்து அனுப்பினேன். நெகிழ்ந்து போனவர் என் விலாசத்தையும், சென்னையில் இருக்கும் என் மகளின் விலாசத்தையும் கேட்டுக் கொண்டு போனவர்.. போனவர்தான்.. ஏமாற்றம்!

ஜானகிக்குத் தெரியாது. தெரிந்தால் சத்தம் போட்டுத் தீர்த்து விடுவாள்.

நம்பிக்கை... எவ்வளவு வலுவான ஆயுதம்!

நான் சீனிவாசன் மீது வைத்த நம்பிக்கைக்குக் காரணம் அப்பா.

''மனுஷனை மனுஷன் நம்பணும்டா... ஒன் அம்மா உடம்பு சரியில்லாம கிடக்கா.. கையில பணம் இல்ல. அவசரமா ஒருத்தர்கிட்ட - எனக்குப் பத்து வருஷம் பழக்கம் அவரு - பணம் கேட்டேன். வெறும் அம்பது ரூபா பணத்தைக் கொடுத்திட்டு 'புரோ நோட்டு'ல கையெழுத்து கேட்டான் பாரு. நொந்து போயிட்டண்டா. அம்பது ரூவா பணத்துக்கு என்னை நம்பல பாரு! அடுத்த நாளே பணத்தைத் திருப்பிக் கொடுத்திட்டேன். நம்பிக்கைத்தாண்டா தம்பி வாழ்க்கை'' அப்பா அடிக்கடி புலம்பிக் கொண்டிருப்பார்.

பேங்க் லோனுக்கு, தெரிந்தவர் யாராவது ஜாமீன் கையெழுத்து கேட்டு வந்தால் தயங்காமல் போடுவார். ஆனால் ஏமாந்ததில்லை. நான் ஏமாந்து விட்டேன்.

கடன் கொடுத்த ஃபைனான்ஸ் நிறுவனத்தில் வீட்டின் மேல் கடன் வாங்கினேன். கதறி அழுத ஜானகியைச் சமாதானப்படுத்தி அவள் நகையை அடகுவைத்து, கிட்டத்தட்ட எண்பதாயிரம் திருப்பி விட்டேன்.

கிராமத்தில் கொஞ்சம் நிலம் இருக்கிறது. அதை விற்றால் பத்தாயிரம் கிடைக்கும். புறப்பட்டேன்.

ரெயிலிலிருந்து இறங்கினேன்.

பிறந்து வளர்ந்த கிராமத்தில் இருபது வருஷங்களுக்குப் பின்பு காலடி வைத்ததில் மனசு சுமையிலிருந்து விடுபட்டு ஒரு தற்காலிக சந்தோஷத்துக்குப் போயிற்று.

ஸ்டேஷனை விட்டு வெளியே வந்தேன்.

இரண்டு கிலோ மீட்டர் நடக்க வேண்டும். முடியாது.

சைக்கிள் எடுத்துக் கொள்ளலாம் என்று முடிவு செய்து பக்கத்தில் இருந்த சைக்கிள் கம்பெனியை நெருங்கினேன். நான் சிறு வயதில் சின்ன சைக்கிள் எடுத்து சைக்கிள் பழகியது இந்தக் கடையிலிருந்துதான்.

வாசலில் நான்கு சைக்கிள்கள் நின்று கொண்டிருந்தன. நான்குமே எலும்புக் கூடாக இருந்தன.

இந்த சைக்கிளில் ஊர் போய்ச் சேர முடியுமா...?

இதில்தான் போக வேண்டும். வேறு வழியில்லை.

''தம்பி ஒரு சைக்கிள் வேணும்...''

அவன் என்னை மேலும் கீழுமாகப் பார்த்தான். யார் இவன்? முத்துசாமியின் ஜாடை இருக்கிறதே... பையனா... பேரனா...?

''எங்க போகணும்?'' என்றான்.

''ஆரியச்சேரி வரைக்கும்.''

''ஆரியச்சேரியில யார் வீட்டுக்கு?''

''வைத்தியநாதன் வீட்டுக்கு'' என்றேன் எரிச்சலாய். இந்தப் பாடாவதி சைக்கிளுக்கு எத்தனை கேள்விகள்?

''ஸார் மன்னிக்கணும். உங்களை எனக்குத் தெரியாது. இந்தக் காலத்துல யாரையும் நம்ப முடியலை. பெரிய மனுஷன் பேரை சொல்லிட்டு சைக்கிள் எடுத்துட்டுப் போறாங்க... திரும்ப வர மாட்டேங்குது.. அவுங்களக் கேட்டா யாரு எம் பேரைச் சொன்னாலும் சைக்கிள் கொடுத்திடறதாங்கிறாங்க.. இதோட ரெண்டு சைக்கிள் போயிட்டு! தயவுசெஞ்சி உங்களுக்குத் தெரிஞ்ச யாரையாச்சும் ஜாமீன் சொல்லச் சொல்லுங்க. சைக்கிள் தாறேன்'' என்றான் அவன்.

ஜாமீன்..! நூறு ரூபாய் கூட பெறாத இந்த சைக்கிளுக்கு ஜாமீன்!

நான் சிரித்தேன். என்னை அவன் ஆச்சரியமாகப் பார்த்தான். என் சிரிப்பின் அர்த்தம் அவனுக்குப் புரியாது.

''அதான் ஆட்சியைக் கவிழ்க்க மாட்டோம்னு திரும்பத் திரும்பச் சொல்றாங்களே, அப்படியும் ஏன் கவலைப் படறீங்க?''

''அவங்க அந்த மாதிரி சொல்றதாலே தானே பயமே வருது...!''

- வி. ரேவதி





✱ விக்கி

**"மெட்ராஸில், மக்கள் டீ.வியில் சினிமா பார்க்க விரும்புகிறார்களே தவிர, சர்க்கஸ் பார்க்க வருவதில்லை."**

ஐந்து யானைகள், இருபத்து மூன்று குதிரைகள், இரண்டு ஒட்டகங்கள், ஒன்பது சிங்கங்கள், இரண்டு கரடிகள், நீர் யானை ஒன்று, ஆஸ்திரேலிய பஞ்சவர்ணக் கிளிகள் 22, நாய்கள் பதினைந்து. இவை தவிர நிர்வாகிகளும் ஊழியர்களுமாக மொத்தம் 330 பேர். இவர்களுக்கும் பல்வேறு சர்க்கஸ் மிருகங்களுக்கும் தினசரி உணவு தயாரித்தளிப்பதென்பதே தினமும் ஒரு கல்யாணம் நடத்துவது போலத்தான். எப்படிச் சமாளிக்கிறார்கள்?

அமர் சர்க்கஸ் உரிமையாளர் ஹேமராஜையும், அவர் மகன் விக்கியையும் சந்தித்துக் கேட்டோம்.

''பொதுவாக, கரும்புதான் யானைகளுக்கு உணவு. கரும்பு போதிய அளவு கிடைக்காத போது, தென்னங்கீற்றுகளைக் கொடுப்போம். ராஜஸ்தான் போன்ற பகுதிகளில் இரண்டுக்குமே தட்டுப்பாடு. அப்போதெல்லாம், அயல் மாநிலங்களிலிருந்து லாரி களில் கரும்பு வரவழைப்போம். இதைத் தவிர ரொட்டி மாவு பிசைந்து, அதிலே நெய் கலந்து, யானைகளுக்குத் தரப்படும். குதிரைகளுக்குப் புல், கொள்ளு தவிர ஊறவைத்த கடலை. நீர் யானையோ தினமும் ஒரு மூட்டை உருளைக்கிழங்கை உள்ளே விழுங்கும். இதைத் தவிர தர்பூசணிப்பழம்.

''சிங்கம், கரடிகளுக்கு மட்டும் தினமும் 150 கிலோ இறைச்சி. நாய்களுக்கு பிஸ்கட், பிரட், பால். கிளிகளுக்குப் பாலுடன் ஆப்பிள் முதலிய பழங்கள், கொட்டைகள் என்று அளிக்க வேண்டும். ஒரு நாளைக்கு 80 லிட்டர் பால் தேவைப்படுகிறது.''

✱ சர்க்கஸ் நடக்கும்போது......



# சர்க்கஸ் நிர்வாகமும் ஒரு சர்க்கஸ் வித்தைதான்!

மிருகங்களுக்கே இப்படி என்றால் மனிதர்களுக்கு? முந்நூறு பேருக்குத் தினமும் மூன்று வேளை சாப்பாடு என்பது சாதாரணமா?

வேலைக்காரர்கள், சர்க்கஸ் கலைஞர்கள், பெண்கள், நிர்வாகிகள் என்று ஒவ்வொரு தரப்பினருக்கும் தனித்தனியாக, மொத்தம் ஆறு மெஸ்கள் இருக்கின்றன.

அனைவருக்கும் எழுந்தவுடன் காப்பி அல்லது டீ. இட்லி, வடை, தோசை. தேவையானால் பிரட் என்று காலைச் சிற்றுண்டி. பகல் பன்னிரெண்டு மணி முதல் பிற்பகல் மூன்றுவரை மதிய உணவு நேரம். ஒவ்வொருவரும் தமது வசதிக்கேற்ற நேரத்தில் போய்ச் சாப்பிட்டுக் கொள்ளலாம். பிற்பகலில் டீயுடன் சமோசா போன்று ஏதாவது உண்டு.

இரவு டின்னர் எட்டு மணிக்குத் தயாராகிவிடும். பெரும்பாலானவர்கள் அசைவம் சாப்பிடுகிறவர்கள் என்பதால், பகல் உணவில் நிச்சயம் நான்-வெஜ் உண்டு. இரவு டின்னர் எப்போதுமே சைவம்தான்.

பல்வேறு மாநிலத்துக்காரர்கள் - ஏன் நிறைய நேபாளிகளும் உண்டு என்பதால், பல்வேறு பண்டிகைகளின் போது அனைவருக்கும் விசேஷ விருந்துகள்.



✱ ஓய்வு நேரங்களில்.....

சென்னையில் சர்க்கஸ் நடைபெறும் எஸ்.ஐ.ஏ.ஏ. திடலுக்கு வாடகை தினம் நாலாயிரம் ரூபாய். மின்சாரக் கட்டணம் நாளொன்றுக்கு இரண்டாயிரம் ரூபாய். சர்க்கஸ் வளாகத்தில் எப்போதும் தயாராய் ஒரு தீயணைப்பு வண்டி இருக்க வேண்டும். இதற்கான தினசரிக் கட்டணம் ரூபாய் 600. இப்படிப் பல்வேறு செலவுகளையும் கணக்கிட்டுப் பார்த்தால், சராசரியாய் நாளொன்றுக்கு ஐம்பதாயிரம் ரூபாய் செலவாகிறது.

''ஓர் ஊரிலிருந்து, இன்னொரு ஊருக்குப் போகும்போது, அறுபது டிரக்குகளை வாடகைக்கு அமர்த்தி, விலங்குகள் உட்பட அத்தனை சாமான்களையும் எடுத்துச் செல்வோம். இது கணிசமான செலவு பிடிக்கிற பணி.

''இப்படி ஒரு பக்கம், நிர்வாக மற்றும் தினசரிச் செலவுகள் நாளுக்கு நாள் கூடிக் கொண்டே போக, இன்னொரு பக்கம், மக்களிடம், சர்க்கஸ் பார்க்கிற ஆர்வம் குறைந்து கொண்டே வருகிறது என்பது விசனத்துக்குரிய ஒரு விஷயம். பொதுவாக ஞாயிற்றுக் கிழமைகளில் நல்ல பார்வையாளர் கூட்டம் இருக்கும். இங்கே மெட்ராஸில், மக்கள் டி.வியில் சினிமா பார்க்க விரும்புகிறார்களே தவிர, ஞாயிற்றுக் கிழமைகளில் கூட சர்க்கஸ் பார்க்க வருவதில்லை.

''டெல்லி, கல்கத்தா இரண்டு நகரங்களில் மட்டுமே சர்க்கஸுக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது. பம்பாயில், வருடத்துக்கு அறுபது நாட்கள், சர்ச்கேட் பகுதியில் உள்ள மைதானத்தை சர்க்கஸ் நடத்துவதற்கென்றே ஒதுக்குகிறார்கள். ஆனால் சென்னையிலோ நிலைமை மோசமாகிக் கொண்டிருக்கிறது. இப்போது சர்க்கஸ் நடந்து கொண்டிருக்கிற எஸ்.ஐ.ஏ.ஏ. திடல் ரயில்வேக்குச் சொந்தமானது. சென்ட்ரல் நிலைய விஸ்தரிப்புத் திட்டம் செயல் படுத்தப்பட்டு விட்டால், இதுவும் போய் விடும்!''

– எஸ். சந்திரமௌலி

படங்கள் : சோமு, கோபிநாத்

# தட்டிப் பறிக்கும் ப
# தானே சாப்பிடு

'**கு**ழந்தை குழந்தை' என்று தாராள மாய்த் தயிரை விட்டு வெண்ணெய் போலப் பிசைந்த சாதம் - ஒரு கிண்ணம் நிறைய....

கண் இமைக்கும் நேரத்தில் கிண்ணத் தோடு 'லபக்'கென்று தரையில் கவிழ்த்து விட்டு.

''அம்மா அடிக்காதே.... 'போனால் போறது'ன்னு சொல்லிடு...'' என்று மழலையில் கட்டளையிடும் உங்கள் மூன்று வயது விஷம வீரனை என்ன செய்யலாம்...?

சட்டென்று எதுவும் செய்துவிட வேண்டாம்... காரணம், தப்பு உங்கள் மீதுதான்! முதல் முறை சாதத்தைக் கொட்டிய பொழுது 'போனால் போகிறது' என்று சமாதானம் சொல்லியிருக்கிறீர்கள். மறுமுறை தண்டப் பிரயோகம் செய்திருக்கிறீர்கள்... எனவே குழந்தை விஷமம் செய்துவிட்டு உங்கள் நல்ல 'மூடு'க்கு 'அப்பீல்' செய்கிறது.

கை தவறியே கொட்டிப் போனாலும் அது வருத்தப்பட வேண்டிய விஷயம்தான் என்பதைக் குழந்தையிடம் தெளிவாக்குங்கள் :

''அடாடா இவ்வளவு சாதம் வீணாகி விட்டதே! ஜாக்கிரதையாய் இருக்கணும்'' என்று கோபப்படாமல், ஆனால் சீரியஸாகச் சொல்லிவிடுங்கள். இப்படிச் செய்யாமல் போனால் போகிறது' என்று சமாதானம் கூறினால் குழந்தைக்கு உணவின் மதிப்புத் தெரியாமலே போகிறது... விளையாட்டாக அதைக் கொட்டுவது, அலட்சியம் செய்வது, 'வேண்டாம், போ!' என்பது - எல்லாமே பெரியவர்களின் கவனத்தை காரணமாகக் குழந்தைகளிடமிருந்து வெளிப்படும் செயல்கள்.



**கோ**பத்தை உணவின் மீது காண்பிப்பது நம் குடும்பத் தலைவர்களின் (பல தலைவிகளும் கூட) ஸ்பெஷாலிடி.

அலுவலகப் பிரச்னைகளின் அழுத்தம் தாளாமல் தலைவர்கள் சாப்பாட்டு நேரத்தில் உணவுத் தயாரிப்புகளை அநியாயமாக, அலட்சியமாக விமர்சிப்பதும், புறக்கணிப்பதும் அதற்குத் தலைவிகள் பதிலுக்குக் கோபப் படுவது அல்லது புலம்புவதும் சகஜம். இதையெல்லாம் குழந்தைகள் பிளாட்டிங் பேப்பர் போல் உறிஞ்சிக் கொள்கிறார்கள்.



- 'அவருக்கு இன்னிக்கு mood சரியில்லை அதான் சரியா சாப்பிடலை' போன்ற விசனப் புலம்பல்கள்.
- 'அவனுக்கு மிளகு ரசம் பிடிக்காதுன்னு தெரியுமில்லே... பின்ன எதுக்காக அதைச் செஞ்சே'......... போன்ற கண்டனத் தீர்மானங்கள்.
- ''என் பிள்ளைக்கு ஒரு நாளைப் போல சமையல் வக்கணையாய் இருக்கணும்............'' போன்ற பெரு



# வம்தான் பருவம்!

மித அலட்டல்கள்.

இவை குழந்தைகளிடம் நிச்சயமான பாதிப்புகளை ஏற்படுத்தும்.

விளைவு : உணவுப் பழக்கங்களில் அந்த விருப்பு வெறுப்புகளை வளர்த்துக் கொண்டுள்ள ஒரு பிஞ்சுத் தலைமுறை நபரையும் சமாளிக்க வேண்டிய நிர்ப்பந்தம் அந்த இல்லத்தில் உருவாகிறது.



"இது வேண்டாம்; அது பிடிக்கவில்லை; அப்புறம் சாப்பிடறேன்..." என்று அம்மாவை ஆட்டி வைக்கிறது குழந்தை. தாயாரோ 'இப்படி வளர்கிற வயசில் சாப்பிடாமல் சண்டி பண்ணுகிறதே' என்று அதனைப் பெரிய பிரச்னையாக்குகிறாள். தாயின் தவிப்பு குழந்தைக்குப் புரியாமலில்லை. சாப்பிடாமல் அழும்பு பண்ணினால் அம்மாவின் கவனம் முழுவதும் கிடைக்கும் என்று உணர்ந்து, அதனைப் பெற அந்தச் கலபமான வழியைக் கையாள்கிறது குழந்தை.



"எங்கள் காலத்துல குழந்தை வளர்க்க இவ்வளவு எல்லாம் கஷ்டப் படலைப்பா..." எனப் பாட்டிமார்கள் அங்கலாய்க்கிறார்கள். நாலு, ஆறு என்று பெற்றுக் கொண்டவர்களுக்கு இந்தக் கவலைகள் கட்டுப்படியாகாதவை. கூட்டுக் குடும்பத்துக் குழந்தைகளும் ஒருவித ஆரோக்கியமான போட்டியில் ஒன்றையொன்று விஞ்சும் வகையில் 'சாப்பாட்டு ரேஸில்' கலந்து கொண்டன. இப்போது இருப்பதோ 'ஒண்ணே ஒண்ணு - கண்ணே கண்ணு...' பெற்றோரின் ஆசை, கனவு கவலைகள் அத்தனைக்கும் இலக்காகிறது அந்த மழலைச் செல்வம்!

மனசைச் சற்று கல்லாக்கிக் கொண்டு தான் செயல்பட வேண்டும். வேளா வேளைக்கு உணவைக் குழந்தையின் முன் வைத்துவிட்டு, சாப்பிடுவதற்கு அவகாசம் தர வேண்டும். குறிப்பிட்ட நேரத்துக்குள் சாப்பிடாவிட்டால் உணவை எடுத்து வைத்துவிட்டு, அடுத்த உணவு வேளையின் போதுதான் கண்ணில் காட்டலாம்.

'குழந்தைக்குத் தானாகச் சாப்பிடத் தெரிந்தால் தானே இப்படிச் செய்யலாம். இன்னமும் ஊட்டித்தானே சாப்பிட வைக்க வேண்டியுள்ளது...!' என்பதுதான் பெரும்பாலான தாய்மார்களின் பதிலாக இருக்கும்.

'குழந்தை தன்னைச் சார்ந்திருக்க வேண்டும்' என்று தாயின் ஆழ்மனம் விரும்ப, அதன் வெளிப்பாடுதான் இந்தப் பதில் என்கிறார்கள் மனோதத்துவ நிபுணர்கள்!

சரியான பருவத்தில் குழந்தையைத் தானாகச் சாப்பிட அனுமதித்தால் அது மிக இயல்பாகக் கற்றுக் கொண்டு விடும்.

**ச**ரியான பருவம் எது? அம்மா ஊட்டும் போது குழந்தை அவள் கையிலுள்ள ஸ்பூனை அல்லது கிண்ணத்தைத் தட்டிப் பறிக்க முயற்சி செய்யும். அவ்வாறு செய்யப்படும் முதல் முயற்சியே குழந்தை தானாகச் சாப்பிடத் தயாராகிவிட்டதன் அறிகுறி. ஆனால் அப்பருவத்தில் பெரும்பாலும் யாருமே குழந்தையைத் தானாகச் சாப்பிட அனுமதிப்பதில்லை! மேலே கொட்டிக் கொள்ளும், நேரம் வீணாகும் என்றெல்லாம் சுயநலத்துடன் சிந்தித்து, 'குறும்பு' என்று குழந்தையைச் செல்லமாக அதட்டி, ஊட்டிவிட்டு விடுகிறோம்!

அதற்குப் பதிலாக, குழந்தை சாப்பிடுவதற்கென்று தனியே தட்டோ கிண்ணமோ எடுத்து வைத்து, மிகப் பிடித்தமான உணவின் ஒரு பகுதியை அதில் பரிமாறிச் சாப்பிடச் சொல்லலாம். சிறிது நேரம் குழந்தை தானாகச் சாப்பிட்ட பிறகு மீதி உணவை ஊட்டி விடலாம். இப்படியே குழந்தை தானாகச் சாப்பிடும் உணவின் அளவைப் படிப்படியாக அதிகப்படுத்தி உதவலாம். மொத்த உணவையும் ஆரம்பத்திலேயே பரிமாறினால் குழந்தை மலைத்துப் போய்ச் சாப்பிடாது.

எதையுமே திரும்பத் திரும்பச் செய்வதன் மூலம்தான் கற்றுக் கொள்ள முடியும் எனவே பெற்றோர் பொறுமையுடன் இருந்தாக வேண்டும்.

இந்தப் பருவத்தில் குழந்தை வேகமாகவும் சுத்தமாகவும் ஒரே அளவிலும் ஒவ்வொரு நாளும் சாப்பிட வேண்டும் என்று எதிர்பார்ப்பது தவறு.

விளையாட்டு, தூக்கம், மனநிலை - இவற்றின் வேறுபாடுகளுக்கு ஏற்ப, சாப்பிடும் உணவின் அளவும் நிச்சயமாக வேறுபடும். குழந்தை எவ்வளவு சாப்பிட வேண்டும் என்பதை நாம் நிர்ணயிப்பதை விட அதன் முடிவுக்கே விட்டு விடுவதுதான் புத்திசாலித்தனம். உடலின் தேவைக்கு ஏற்ப சரியான அளவு உணவைப் பெரும்பாலும் குழந்தை இயல்பாகவே உட்கொள்ளும்.

**ச**மச்சீரான சத்துள்ள உணவு குழந்தைக்குக் கிடைக்கிறதா என்பதில் பெற்றோர் மிகக் கவனமாக இருக்க வேண்டும். குழந்தைகள் பலவித சுவைகளை விரும்பி ஏற்கா விடில் இது மிகவும் கஷ்டமாகிப் போகும். சரியான பருவத்தில் எல்லாவித சுவைகளையும் சிறிய அளவுகளில் அறிமுகப்படுத்த வேண்டும். பிறந்த ஆறாவது மாதத்தில் சுவை அரும்புகள் தங்கள் வேலையைத் தொடங்குகின்றன. பால், டப்பாவில் அடைத்த குழந்தை உணவு தவிர இதர திரவ உணவுகளைச் சேர்க்க ஆரம்பிக்கலாம். பல் முளைக்க ஆரம்பித்ததுமே இலேசாகக் கடித்து உண்ணக் கூடிய உணவு வகைகளைச் சின்னஞ் சிறு துண்டுகளாக்கிக் கொஞ்சம் தரலாம். துளித்துளியாகத்தான் அதிகரிக்க வேண்டும்.



"உன் மாமியார் காணாமப் போனத டீ.வில காமிச்சாங்களே... ஆள் வந்தாச்சா?"
"மெட்ரோ சானல்ல ப்ரியா மூலமா அறிவிச்சாத்தான் வருவேன்னு லெட்டர் எழுதிருக்காங்க!"
- அம்பை தேவா

'இதைச் சாப்பிட்டால் சாக்லேட் தருவேன்' என்று ஆசை காட்டுவதன் மூலம் சாப்பாட்டை விட சாக்லேட் சுவையானது என்ற தவறான அபிப்ராயத்தைக் குழந்தைக்கு நாமே புகட்டுகிறோம். தவிர, கதை சொல்லி, வேடிக்கை காண்பித்து, (இன்று டீ.வி. முன் உட்கார வைத்து) சாப்பிடச் செய்வதும் நல்லதல்ல. தானாகவே குளித்து, உடுத்தி அலங்கரித்துக் கொண்டு, பிறருடன் பழகுவது போல் உணவு உண்பதும் ஒரு முக்கியமான பணி என்பதைக் குழந்தை உணர்ந்து செய்ய வேண்டும்.

'பெற்றோருக்கு அந்த எண்ணம் முதலில் வந்தால்தானே குழந்தைகளுக்கும் அது ஏற்படும்....?' என்ற கேள்வியை இந்த டீ.வி. டின்னர் யுகத்தில் வாசகர்களின் முன் வைக்கிறோம்....!

தகவல்கள் : டாக்டர் ஸ்ரீநிவாசன், புவனேஸ்வரி சங்கர், ருக்மிணி ராமச்சந்திரன்.
தொகுப்பு : கீதா மோஹன்
குழந்தை சிந்தூரியின் வண்ணப்படம் : கோபிநாத்.



## ரஹ்மானுக்கு ஜே!



## வைரமுத்துவுக்கு ஜே!

அவர் பீட்டுக்கு பீட் ஜொலிக்கிறார் என்றால் இவர் பாட்டுக்குப் பாட்டு!

கதை ஒன்றும் பிரமாதமில்லை. ஒரு பயங்கரவாதி திருந்தி, சாமிநான். அவ்வளவே. ஆனால் ஒவ்வொரு காட்சியிலும் 'த்ரில்'லை தராசில் ஏற்றுகிறார்கள். தொண்டை வரண்டு போகுமளவு திக் திக். பிளாஸ்டிக் சர்ஜரி பண்ணிக் கொண்டு வினீத், சுரேஷ் மேனனாக மாறுகிற இடத்தில் வேகமெடுக்கிற திரைக்கதை, கம்பா பஞ்ச கல்யாணி குதிரை கணக்கில் ஜிவ்வோ ஜிவ்வோ என்று எகிறிப் பாய்கிறது.

ஐயோ, அந்தக் கோரம்! இன்ஸ்டிடியூட் இறக்குமதி போலிருக்கிறது. மணல் துகளில் உள்ளெல்லாம் புகுந்து எழும் ஆச்சர்யம்.

இன்டர்வெல்லோடு படம் முடிந்து விடுமோ என்று சந்தேகப்படுகிற நேரத்தில் '21 வருடங்களுக்குப் பிறகு' என்ற ஸ்லைடோடு தொடங்குகிற இரண்டாவது தாக்குதல்...

படத்தில் இடிக்கிற விஷயங்கள் இரண்டு.

அந்த சிலோன் பயங்கரவாதியின் பிள்ளையிடம் புலி கிலி இல்லை. எதற்காக அந்தனை கொலை பண்ணுகிறான்? லோக்கல் தாதாவா? எனில் இந்திய ராணுவ ரகசியம் அவனுக்கு எதற்கு?

ஆரம்பக் காட்சியிலிருந்தே சிலோனில் வசிப்பதாகக் காட்டப்படுகிற ஹீரோ எப்படி இந்திய ராணுவத்தில் சேர முடியும்?

இவ்விரு இடங்களில், கதாசிரியர் காலடியில் வாழைப்பழத் தோல்.

ரேவதி. சீண்டல்களில் புதுக் கவிதை. கொஞ்சல்களில் மரபுக் கவிதை. கொஞ்சம் கூட ஈடுகொடுக்க முடியாத உம்மணாமூஞ்சி சுரேஷ்மேனன். திரைக்குப் பின்னால் மட்டும் இருந்தால் இவர் எதிர்காலம் ரொம்பப் பிரகாசமாக இருக்கும்.

- ஆர்.பி.ஆர்

புதிய முகம்




சிக்கரியும்
சிக்கரி என்பது ஒரு உலர்ந்த வேர். காஃபிக்குப் பதிலான ஒரு எளிய மாற்றாக உலகப்போரின் சமயத்தில் புழக்கத்தில் வந்தது. விரைவில் ஒரு பழக்கமாகி விட்டது. சிக்கரி காஃபிக்கு இணையல்ல.
தோற்றத்தில், மணத்தில், சுவையில் எதிலுமே காஃபிக்கு எள்ளளவும் இணையல்ல.
காஃபி அருந்தியபின் உங்கள் நாவில் சிக்கரியின் சுவை பின்தங்கினால், அது ஒரு சாதாரண காஃபி
காஃபியும்
என்று நீங்கள் அறிந்து கொள்ளுவீர்.
அப்படியானால் காஃபியுடன் சிக்கரியை சேர்க்கக் காரணம்? அசல் காஃபியின் அருமையான சுவையை கை விடுவானேன்?
அதன் மலிவான விலையினாலா? அல்லது கலப்படமற்ற காஃபியின் அருமையான சுவையை ருசிக்க உங்களுக்கு இது நாள்வரை வாய்ப்பு இல்லாததாலா?
ஒன்றல்ல.


அறிமுகம்
ஆசியாவின் மிகப்பெரியதும், மிகச் சிறந்ததுமான,
டாடாவின் குடகு மலைச்சாரல் தோட்டத்திலிருந்து
வழங்கும் "கூர்க்".
தேர்ந்தெடுத்த காஃபி கொட்டைகளை வறுத்துப்
பொடித்து, புத்துணர்ச்சி நறுமணம் குறையாத
வண்ணம் உடனடியாக பாக் செய்து
அளிக்கப்படுகிறது "கூர்க்". நூற்றுக்கு நூறு
கலப்படமற்ற ஃபில்டர் காஃபி. சுவையில் ஒப்பற்றது.
கலப்படமற்ற
நிறமோ ஆதவனின் உதய நேரச் செம்பொன்.
சூடாகச் சுவைக்கச் சுவைக்கக் கிறங்க வைக்கும்
அசல் காஃபிச் சுவை. இந்த அரிய அனுபவத்தை
விவரிக்க ஒரே சொல் பொருந்தும்–ஆத்ம திருப்தி.
ஆம். நம் முன்னோர்கள் அசல் காஃபியை அருந்திப்
பெற்ற ஆத்ம திருப்தி. இப்போது உங்களுக்கு
மீண்டும் அளிக்க வந்துள்ளது டாடாவின் கூர்க்
காஃபி.
காஃபி
coorg
100% PURE FILTER COFFEE
டாடாவின் "கூர்க்" காஃபி–அன்றாடம் காலையில் ஆத்ம திருப்தி.
Mudra:CCL:622:93:TAM

வருந்துகிறோம். எனது தந்தையும், பி.டபிள்யூ.டியில் பணிபுரிகிறவருமான திரு கே. வி. ராஜாராமன் நேற்று காலை காலமானார். தோற்றம் : - மறைவு : - கண்ணீரில் கரையும் சுற்றமும் நட்பும்.

அதிர்ந்தேன். ஒரு தினத்தந்தியின் ஓரங்களை இறுகப் பற்றிக் கொண்டேன். விரல்களின் நடுக்கத்தில் பேப்பரின் கதகளி. கடைசியில் ஸ்டாம்ப் சைஸ் போட்டோவும் நாலு வரிச் செய்தியுமாக கே.வி.ஆர். தினத்தந்தியில் காலமாகி விட்டார்.

நான் போட்டோவைக் கூர்ந்தேன். மையின் அதீத ஆக்கிரமிப்பில், கே.வி.ஆரின் மொலய்க் கன்னங்களில் கருந்திட்டுக்கள். மற்றபடி அதே ஸ்ரீசூர்ண நெற்றி, வெற்றிலை குதப்பும் அனுமார் வாய், மற்றும் முக்கால் கிரௌண்ட் முன் வழுக்கை. கே.வி.ஆர். கடைசியாய் அவரை எப்போது பார்த்தேன்?

கிட்டத்தட்ட ஒரு வருஷமாக அவரோடு பழகியும் அவரது ரசனை பற்றிய குழப்பம் இன்னும் எனக்குத் தீராமலேயே இருந்தது.

''மகாமசானம் படிச்சிருக்கியோ? புதுமைப் பித்தனோடது. கிடைச்சா விடாதே. ஸ்டைல்னா என்னன்னு, அதைப்படி - புரியும்.''

ஆட்டி ஆட்டிப் பேசின கையில் கிரைம் நாவல். 'தொடாதே, துடிதுடிப்பாய்.'

''இது எதுக்கு?''

''ஏன்? படிச்சா என்ன தப்பு? என்ன தப்புங்கறேன்? மாசம் ஒண்ணு எழுத றான்யா! என்ன இன்ட்ரஸ்டிங் தெரியுமா?''

- இதுவும் கே.வி.ஆர். அவரது மாடர்ன் ஆர்ட் குணாதிசயங்களே அவர்பால் என்னை அதிகம் ஈர்த்தன.

இன்றைக்கெல்லாம் இருந்தால், எனக்கும் கே.வி.ஆருக்கும் இடையே அரைதலைமுறை இடைவெளி இருந்தது. அவரது ஐம்பத்தி எட்டும், எனது இருபத்தி ஆறும் எப்படிப் பல்வகையிலும் ஒத்துப் போயின? எனது சிண்டி ரசிப்பும், அவரது திருவாய் மொழி சிலாகிப்பும் கைகோத்துக் கொண்டமாயம் யாமறியோம் பராபரமே.

# கே.வி.ஆர்

# என்றொரு நண்பர்

கே.வி.ஆரை எனக்கு ரயிலில் பழக்கம். தாம்பரத்திலிருந்து பூங்கா வரையிலான தினசரி நரக யாத்திரை. ரஜினி ஸ்டைலில் டைவ் அடித்து சீட் பிடிக்கும் எனது லாவகத்தில் மயங்கிக் காதலனார். தினம் முக்கால் மணிநின்று போக முடியாத தள்ளாமையால் தனக்கும் ஒரு சீட் பிடித்து வைக்க முடியுமா

ஞாபகமிருக்கிறது. ப்ளூ டயமண்டில் லாஸ்ட் எம்பரர். நான்கு தொடர் காட்சிகளுக்குத் தேவையான பாப்கார்ன், கடலை, தண்ணீர், கவுளி வெற்றிலை உள்ளிட்ட ஆயத்தங்களுடன் களம் காணத் தயாராக வந்திருந்தார். முதல் காட்சி முடிகிற வரைக்கும் என்னை வளவளத்து விட்டு, அடுத்த ஷோ ஆரம்பத்தில் சரிந்து உட்கார்ந்து தூங்க ஆரம்பித்து விட்டார். பிற்பகல் உணவுக்குப் பின் மறுபடி தியேட்டருக்கு வந்த போது, ''படம் பார்த்தது போதும். ஏதாவது புத்தகம் வெச்சிருந்தேன்னா குடு!'' என்றார்.

''எதுக்கு பின்ன மெனக்கெட்டு வரணும்?''

''என்னமோ ஆஸ்கார் படம்னா ளேன்னு வந்தேன். நம்ம ரேஞ்சுக்கு குஷ்பு தான் லாயக்கு.''

என் கையில் இருந்த புத்தகத்தின் கோணங்கித்தனம் மிகுந்த அட்டை அவரை இழுத்திருக்க வேண்டும்.

''என்ன நாவல்?''

''நாவல் இல்லை. தமிழ் இலக்கியக் கோட்பாடு.''

''கே.வி.ஆர் அதைப் பிடுங்காத குறையாய் வாங்கிக் கொண்டு உரக்க இருமியபடி இறங்கிப் போய் விட்டார்.

என்று ஒருநாள் கேட்டார். அந்த க்ஷணம் என்னுள் பீறிட்டெழுந்த பரோபகாரம் எத்தனை வீரியம் வாய்ந்தது என்று லேசில் சொல்லி விட முடியாது.

''ஆஹா, அதற்கென்ன! பேஷாய்.''

அன்று என் சீட்டை அவருக்குக் கொடுத்தேன். மறுநாளிலிருந்து அவர் எனது பக்கத்து சீட். இரண்டொரு நாளில், ''ஆத்துல என்ன சமையல்?'' என்கிற அளவுக்கு நெருக்கமாகி, நாலாவது நாளில், ''நோக்கு கதை, கிதை எழுதற பழக்கம் உண்டோ?'' என்றார். சட்டென்று சிலிர்த்துப் போய்க் கலைந்தேன்.

''நீ ஏன் புரியாம எழுதணும்? அஃப் கோர்ஸ் ஆரம்பத்துல எனக்கும் அந்த கிறுக்கு இருந்தது. பின்னால மாறிட்டேன். நீயும் மாறுவே.''

கே.வி.ஆர். ஒரு மாஜி ரைட்டர் என்பது எனக்கொரு செய்தியாக இருந்தது. நான் பிறப்பதற்கு முன்பே மண்டையைப் போட்டு விட்ட இதழ்களில் அவரது சிலபல சிறுகதைகள் வந்திருக்கின்றன. காற்று பட்டாலே கிழிந்து விடக்கூடிய மிக அபாயகரமான நிலையிலிருந்த ஓரிரு பழுப்பாகி



''ஏன் கேக்கறீங்க?''

''சும்மாத்தான். இப்படி வெட்டியா மோட்டு வளையை வெறிக்கிறவன் ஒண்ணு குழண்ட கேஸா இருக்கணும். இல்லே, ரைட்டரா இருக்கணும்.''

மறுநாள் எனது மகத்தான படைப்பு ஒன்றை ('சைபர்' என்கிற மகா இலக்கிய இதழ் ஒன்றில் வெளிவந்தது) அவர் முன் சமர்ப்பித்தேன்.

''ஓ. நீ இந்த குரூப்பா?''

''நான் எந்த குரூப்பும் இல்லே. வேற எவனும் இது மாதிரி கதைகளைப் போடறதில்லை.''

விட்ட பத்திரிகைக் 'கட்டிங்'களைப் பிறிதொரு நாளில் அவர் எனக்குக் காட்டியிருக்கிறார். சற்று முந்தின தலைமுறையைச் சேர்ந்தவர் என்றாலும் எனது அலைவரிசைக்காரர் என்கிறபடியால் என்னால் வெகு சுலபமாக அவரோடு ஒட்டிக் கொள்ள முடிந்தது. பலப்பல விஷயங்கள் குறித்து விவாதிக்க முடிந்தது. அக்கால அக்கப் போர்கள் அவ்வப்போது இலவச இணைப்பாகக் கிடைத்தன.

பா.ராகவன்

பல உன்னதமான மாலைப் பொழுதுகளில் தியேட்டர்களிலும், தெருமுனை டீக் கடைகளிலும், பார்க் ஸ்டேஷன் பெஞ்ச்களிலும், ரேஷன் கடை க்யூவிலும் போன மாதம் வரை என்னோடு பேசிக் கழித்த கே.வி.ஆர். இன்று இல்லை. கடவுளே! நினைத்துப் பார்க்கவே முடியாத இப்படி ஒரு எலக்ட்ரிக் ஷாக்கை ஏன் எனக்குத் தருகிறாய்?

கே.வி.ஆருடன் பழகிய நாட்கள் மிகக் குறைவெனினும் அவர் ஏற்படுத்திய பாதிப்பு மிக அதிகம்.

''பாருடா குழந்தே. ஏதாவது சாதிக்கணும்னு ஆசை இருந்ததுன்னா கல்யாணத்துக்கு முன்னாடி முடிச்சுடு. அப்புறம் உன்னால் ஒரு காரியம் உருப்படியா பண்ண முடியாது - பெண்டாட்டிக்குப் பாவாடை அலசித் தர்றதைத் தவிர.''

- இது, கே.வி.ஆர். என்னிடம் அடிக்கடி உதிர்க்கிற மணிமொழி. போன வாரம்தான் பெண் பார்த்து விட்டு வந்திருக்கிறேன். இன்னும் பதினைந்து நாட்களில் நிச்சய தார்த்தம் வந்து விடப் போகிறது. ஒரு சில மாதங்களுக்குள் அநேகமாகக் கல்யாணம்.

நான் பெண் பார்க்கப் போனது கே.வி.ஆருக்குத் தெரியாது. போன மாதம் அவர் தாம்பரம் வீட்டைக் காலி செய்து விட்டு மாம்பலத்தில் எங்கோ குடிபோய் விட்டார். கடைசியாக நான் அவரைப் பார்த்தது, அவர் வீடு காலி பண்ணின நாளுக்கு முந்தின தினம். மேம்பாலம் இறங்கி ப்ளூ டயமண்ட், லாஸ்ட் எம்பரர்.

''வீடு மாறிடறோம்டா. பையன் பார்த்திருக்கான். எழுநூத்தம்பது ரூபாய் வாடகைக்கு எவன் தரான் மாம்பலத்துல? என்னமோ அதிர்ஷ்டம், கிடைச்சிருக்கு. இன்னும் மூணுமாசம்தான் சர்வீஸ். இருந்தாலும் தினம் அவ்ளோ தூரம் போயிட்டு வரதுக்குள்ளே உயிரே போயிடறது. அதான், பையன் சொன்னான். சரீன்னுட்டேன். எனிவே, இனிமே ரயில்ல எனக்கு சீட் போடற வேலை இல்லை உனக்கு.''

**பா**தி கிழிந்த லாட்டரி டிக்கெட்டின் பின்பக்கம் கே.வி.ஆர். எழுதிக் கொடுத்த மாம்பல அட்ரஸ் டைரியில் இருக்கிறது. ஏனோ எனக்குப் போய் வர வேண்டும் போல் இருந்தது. கே.வி.ஆரைத் தவிர அவர் வீட்டு மனிதர்கள் யாரையும் எனக்கு முன் பின் பழக்கமில்லை. அவரது திருமதியார், அசப்பில் சுந்தரிபாய் மாதிரி இருப்பார் என்று ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் கே.வி.ஆர். சொல்லியிருக்கிறார். இரண்டு மகன்களும், மூன்று மகள்களும். ரிடையராகி வருகிற பணத்தில் முதல் பெண்ணுக்குக் கல்யாணம் முடிக்க இருந்தார்.

டீ.வி. அலறும் ஞாயிறு காலை. மாம்பலத்தில் இறங்கி, அட்ரஸ் எடுத்துப் பார்த்தேன். மார்க்கெட்டைக் கடந்து, நீண்ட சாலை. தண்ணீர் வராத குழாயை ஒட்டிய குறுகிய சந்து. வரவேற்கும் சாக்கடை. வழி விடாத எருமை. பாரம்பரியம் மிக்க மேற்கு மாம்பலம்.

கதவைத் திறந்தது கே.வி.ஆரின் மூத்த பெண்ணாக இருக்க வேண்டும். துரக படிந்த விக்ரகம் மாதிரி இருந்தாள்.

''நீங்க...''

''எம் பேர்... நான் கே.வி.ஆர் சாருக்குத் தெரிஞ்சவன். பேப்பர்ல...'' அவள் உள்ளே செல்ல, நான் பின்னே நடந்தேன்.

''அம்மா! இவர் அப்பாவோட சிநேகிதராம்.''

வீட்டில் வேறு சில உறவினர்களும் இருப்பதாகத் தெரிந்தது. ஏதோ உணர்ச்சி வேகத்தில் வந்து விட்டேன். எதற்கு வந்தேன்? என்ன விசாரிக்கப் போகிறேன்? முன் பின் பழக்கமில்லாத முகங்கள்.

உள்ளிருந்து நாற்காலி வந்தது. கடைசி பெண் போலும்.

''உக்காருங்க.''

சற்று பெரிய சைஸ் வத்திப்பெட்டி என்று கருதத்தக்க ரூம். ஹேங்கரில் சட்டைகள், சுவரில் ஸ்டிக்கர் பொட்டு, கதவோரம் துடைப்பம். அழுக்கு ஃபேனில் பழைய உஷா.

''எப்படி... திடீர்னு... பேப்பர்ல பார்த்தும் ஷாக்காயிடுத்து. போன மாசம் வரைக்கும் தினமும் ட்ரெயின்ல ஒண்ணா வருவார்.''

''நீங்க அவர் ஆபீஸா?''

''இல்லே. நான் பேங்க் ஆஃப் இந்தியா. பார்க் ஸ்டேஷன் பிராஞ்ச். சார் கூட ஒரு வருஷமாப் பழக்கம். எவ்ளோ நல்ல மனுஷர்!''

## பிரேமதாசாவின் மறுபிறவி ஆசை!

**ஸ்ரீ**லங்கா ஜனாதிபதி கொலை செய்யப்பட்ட போது பீஹார் மாநிலத்தில் உள்ள மஸ்தி கிராம மக்கள் மிக அதிகமாகத் துக்கப்பட்டார்கள். புத்த கயாவுக்கு அருகில் அமைந்துள்ள இந்தக் கிராமத்தின் மக்கள் நான்கு நாட்கள் உண்ணாவிரதம் கூட இருந்தார்கள். பிரேமதாசா மீது இவர்களுக்கு அப்படி என்ன அன்பு? ஒரு வருடத்திற்கு முன்பு பிரேமதாசா இந்தக் கிராமத்திற்கு விஜயம் செய்தார். அப்



என் குரல் எனக்கே அந்நியமாவது மாதிரி இருந்தது.

மாமி மற்றும் இரு பெண்கள் என்னையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். நாற்காலி கொண்டு வந்த தாவணி உள்ளே இருக்கிறது.

''ஸார் ஆபீஸ்காரா...''

''எல்லாரும் வந்தா. அப்பாவோட பேப்பர்ஸ் எல்லாம் சீக்கிரம் மூவ் ஆகிட ஏற்பாடு பண்றதாச் சொல்லியிருக்கா.''

சட்டென்று மாமி கேட்டாள். ''உங்களுக்கு அவர் ஏதாவது குடுக்கணுமா?'' எனக்குப் புரியவில்லை.

''இல்லே... மொத்தமா இருபத்திரெண்டாயிரம் யார் யாருக்கோ பாக்கி இருக்கறதா எழுதி வெச்சிருக்கார் டைரில. உங்களுக்கு ஏதாவது...''

''ஸாருக்கு... கடனா? பொண் கல்யாணத்துக்காக யார்கிட்டயாவது வாங்கியிருக்காரா?''

எனக்குக் குழப்பமாக இருந்தது. கே.வி.ஆர் முகம் சட்டென்று ஒருமுறை கண்முன் வந்து போயிற்று.

''ஹூம். கடைசி வரைக்கும் அவர் தன்னை மாத்திக்கவேயில்லை. வீட்டுல கல்யாண வயசுல மூணு பொண்கள் இருக்கிற ஞாபகமே கிடையாது. அப்படி என்னத்தைக் கண்டாரோ, அந்தக் கட்டைல போற குதிரைல. சனிக்கிழமை ஆனாப் போரும்...''

கடவுளே! இவர்கள் என்ன சொல்கிறார்கள்? கே.வி.ஆர்...!

''அவர் போன அன்னிலேர்ந்து துக்கம் விசாரிக்க வந்தவாளை விட, துட்டு வசூலிக்க வந்தவாதான் அதிகம். அதான் கேட்டேன். உங்களுக்கும் ஏதாவது அவர் தரணுமான்னு.''

கே.வி.ஆர் இறந்து விட்ட அதிர்ச்சி இப்போது எனக்குப் பெரிதாகப்படவில்லை. அவரது முற்றிலும் மாறுபட்ட பிறிதொரு முகத்தை இப்போது இவர்கள் எனக்கு அறிமுகப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். காட்! கே.வி.ஆரா? அவர்தானா? மாமி சொன்னாள். ''நீங்க யாருன்னு எனக்குத் தெரியல்லே. இருந்தாலும் பார்க்க நல்லவராத் தெரியறேள். ஒரு நாளைக்கு உங்களை மாதிரி நாலு பேர் அவருக்குத் தெரிஞ்சவன்னு வரான். யாருன்னு தெரியல்லே. அஞ்சாயிரம் பாக்கி, ஆறாயிரம் பாக்கிங்கறான். எனக்கு என்ன பண்றதுன்னே புரியலே. வர்ற பணம் சீக்கிரம் வந்தாதுன்னா தேவலை. மொத்தமா வாசல்ல கொண்டு வெச்சுட்டு, எடுத்துண்டு ஒழிங்கோன்னு நிம்மதியா இருந்துடுவேன். வயசு வந்த பொண்களை வெச்சுண்டு நான் என்ன பண்ணுவேன்?''

அழுகிற மாமியைச் சமாதானப்படுத்துகிற நிலையிலெல்லாம் நான் இல்லை. ஒருவேளை அட்ரஸ் மாறி வந்து விட்டேனா என்கிற சந்தேகம் கூடச் சட்டென்று எழுந்தது. ஆனால் சுவர் போட்டோவில் அதே கே.வி.ஆர். அதே ஒற்றை ஸ்ரீசூர்ணம், அதே வெற்றிலை குதப்பும் அனுமார் வாய், மற்றும் அதே முக்கால் கிரௌண்ட் முன் வழுக்கை. எல்லாம் அதே, அதே, அதே. சூழ்நிலையின் இறுக்கம் கூடுவது போலப் பட்டது. நான் மெள்ள எழுந்தேன். மாமி மறுபடி கேட்டாள். ''உங்களுக்கு ஒண்ணும் அவர் கொடுக்க வேண்டிய பாக்கி இல்லையே?''

''சேச்சே. அதெல்லாம் ஒண்ணும் இல்லை.''

நான் மகா குழப்பத்தில் இருந்தேன். ரொம்ப எத்தனிக்கையில், அலமாரி புத்தக வரிசையில் ஒன்று துருத்திக் கொண்டு முன்நின்றதைப் பார்த்தேன். கே.வி.ஆர் என்னிடம் வாங்கிப் போன தமிழ் இலக்கியக் கோட்பாடு.

---

பொழுது இந்தக் கிராமமே போலீசாரின் கண்காணிப்பில்தான் இருந்தது. காரணம் 90 சதம் கிராம மக்களின் தொழில் கள்ளச் சாராயம் காய்ச்சுவதும், திருட்டு போன்ற குற்றங்கள் செய்வதும்தான். ஏழ்மையில் உழன்று கொண்டிருந்த இந்தக் கிராம மக்களுக்காக வீடு கட்டித் தரும் திட்டம் ஒன்றைத் தம் நாட்டின் சார்பாக பிரேமதாசா அறிவித்தார். 50 வீடுகள் டாய்லெட் வசதிகளுடன் ஸ்ரீலங்கா அரசால் அமைக்கப்பட்டன. கிராமத்தின் பெயரை 'புத்த கிராம்' என மாற்றி வைத்தார் பிரேமதாசா. அந்தக் கிராம மக்கள் இனி கள்ளச் சாராயம் காய்ச்சுவதில்லை, சமூக விரோத நடவடிக்கைகளில் ஈடுபடுவதில்லை என உறுதி எடுத்தனர்.

கிராமத்தில் அடுத்து பிறக்கும் ஆண் குழந்தைக்கு 'பிரேமதாசா' என்று பெயரிட இருக்கின்றனர். காரணம் 'காலனி'யைத் திறந்து வைத்த விழாவில், 'நான் இந்தப் புனித புத்த ஸ்தலத்தில் மறுபிறவி எடுக்க விரும்புகிறேன்' எனக் கூறினார் பிரேமதாசா.

ஆதாரம் : சண்டே

தகவல் : எஸ். ஆலன்



## நில், கவனி, வெற்றி கொள்!

# பழகும் முறையில்

இந்தப் படத்தில் இருக்கும் இளைஞர் வரைந்த படங்களை ஒவ்வொரு நாளும் பத்திரிகைகளில் பார்க்கிறீர்கள். இளைஞரின் பெயர் : ஸ்யாம் - ஸ்யாம் சங்கர். யாஷ்மா என்ற பெயரிலும் சில சமயம் வரைகிறார்.

ஸ்யாம் தூரிகைத் தொழிலை ஏற்றுக் கொண்டு நான்கு வருடங்களாகி விட்டன. அவர் வயதோ இருபத்திரண்டுதான்! மீசை சரியாக அரும்பாத பருவத்தில் சொந்த ஊரான ராஜபாளையத்திலிருந்து சென்னை வந்தார்.

பள்ளிப் பருவத்தில், பாடத்தில் இல்லாத ஆர்வம் படம் போடுவதில் இருந்தது ஸ்யாம் சங்கருக்கு. பாடப் புத்தகத்தின் வெற்று மூலைகளைச் சித்திரங்களால் நிரப்பினார். வாத்தியாரைத் தத்ரூபமாக வரைந்திருந்ததால் உதைபடாது தப்பினார்.

ஆனால் மதிப்பெண்கள் குறைந்த போது வீட்டில் அப்பாவிடம் உதைபடாமல் தப்ப முடியவில்லை!

ஸ்யாம் பத்தாம் வகுப்பு ஃபெயிலான போது ஏற்பட்ட வருத்தத்தையும் மூழ்கடிக்கும்படியான ஒரு கவலை நிலை குடும்பத்தில் உருவானது. நம்பிக் கெட்டதால் திடீரென்று மாபெரும் கடன் கனம். வளமாக இருந்த விவசாயக் குடும்பம் நொடித்துப் போனது.



அப்போதுதான் சென்னைக்குப் பிழைப்புத் தேடிப் புறப்பட்டார் ஸ்யாம்.

''சினிமா பானர் வரைவதில்தான் எனக்கு ரொம்ப ஆசை. விஜயா - வாஹினியில் போய் வேலை கேட்டேன். அம்புலிமாமா ஆர்டிஸ்டாக அமர்த்தி விட்டார்கள். சினிமா பானர்கள் தயாரிப்பதைப் பார்க்கும் வாய்ப்புத்தான் கிடைத்தது.

''ஃபானின் கீழ் தனியறையில் அமர்ந்து நான் வேலை செய்வதை எங்கள் ஊர்க்காரர்கள் சிலர் பார்த்து விட்டுப் பெருமையாகப் பேசினார்கள். ஆனால் உண்மையில் நான் அப்போது கிட்டத்தட்ட 'கேர் ஆஃப் பிளாட்ஃபாரம்!'

''இட்லிக் கடை நடத்திய ஒரு வயதான கிழவியின் வீட்டில் என் சொற்ப சாமான்கள். நான் தூங்கியதோ அருகே மெக்கானிக் ஷெட்டில் இருந்த கார்களில். அங்கே இருந்த சில டிரைவர்கள் நண்பர்களானார்கள். தினத்தந்தி, குமுதம், இதயம், தினமலர் என்று பத்திரிகைகளின் பெயர்களுடன் விலாசங்களும் அங்கு செல்லும் வழியும் எனக்குக் காட்டிக் கொடுத்தார்கள்.

''ஃப்ரீ லான்ஸாக வேலை செய்தால் கூடுதலாகச் சம்பாதிக்கலாம் என்ற நம்பிக்கையில்

# நில், கவனி, வெற்றி கொள்!

வேலையை விட்டேன். அந்தக் கால கட்டத்தில் வருமானமின்றித் தவித்த போது சாப்பாட்டுச் செலவுக்குக் கடன் அளித்தவர்களை நன்றியுடன் இன்று நினைத்துக் கொள்கிறேன்.

''ஒவ்வொரு பத்திரிகை அலுவலகமாகச் சென்று நான் வரைந்த படங்களைக் கொடுத்து விட்டு வருவேன். 'ரொம்ப சின்னப் பையனா இருக்கியே, கொஞ்சம் வளர்ந்த பிறகு வா' என்று ஓர் அலுவலகத்தில் சொன்னார்கள். மற்றொரு இடத்தில் ஒரு கதைக்குப் படம் போட்டு வாங்கிக் கொண்டார்கள். அந்தப் படம் பிரசுரமாயிற்றா என்று தெரியவில்லை. பேப்பர் கடையில் போய் மெள்ள அந்த இதழின் பக்கங்களைப் புரட்ட முயற்சி செய்வேன்.... 'டேய்! கையை எடு!' என்று கடைக்காரர் மிரட்டுவார். எனக்கோ மூன்று ரூபாய் கொடுத்து அந்தப் பத்திரிகையை வாங்க சக்தியில்லை. பார்த்தேன்; ஒரு பேப்பர் கடைக்காரரைத் தேர்ந்தெடுத்து நட்புடன் பழகினால் என்ன...? அந்த உரிமையில் எல்லா பத்திரிகைகளையும் புரட்ட முடிந்தது.

''அப்படிப் புரட்டுகையில் ஒரு நாள்... என்ன ஆச்சரியம்! எப்போதோ ஒரு முறை நான் வரைந்து கொடுத்த பொங்கல் விழா காட்சி 'ராஜம்' இதழில் பிரசுரமாகியிருந்தது. சந்தோஷம் பிடிபடாமல் அந்த

## பாதி வெற்றி...

அலுவலகம் சென்று ஆசிரியர் சந்திரா ராஜசேகரிடம் நன்றி கூறினேன். அப் படத்துக்குத் தரப்பட்ட முப்பது ரூபாய் சன்மானம் மூன்று நாட்களுக்குக் கடன் வாங்காமல் என் வாழ்க்கை ஓட உதவியது.''

ஸ்யாம் எப்படி மனமுடையாமல் தொடர்ந்தார்...?

''என் படங்களை எல்லோருமே பாராட்டினார்கள். ஆனால் அவற்றைப் பிரசுரித்தால்தானே பணம் கிடைக்கும். பாராட்டு, நம்பிக்கை இழக்காமல் இருக்க உதவியது; அதே சமயத்தில் என்ன செய்தால் படங்கள் பிரசுரமாகும் என்று யோசிக்க ஆரம்பித்தேன். பேப்பர் கடைக்காரருடன் இசைவாகப் பழகியதால் புத்தகங்களைப் புரட்ட வாய்ப்புத் தந்தார் அல்லவா... அதே போல் பத்திரிகை அலுவலகத்தில் பொறுப்பான பணியிலிருந்தவர்களிடமும் மரியாதையுடனும் பக்குவத்துடனும் பேசிப் பழக முயற்சி செய்தேன். அவர்கள் மிகவும் மதிக்கும் ஒரு விஷயம் : நேரம். அதனால் ஒரு சிறு பணியானாலும் சரி, பெரிய படைப்பானாலும் சரி காலந் தவறாமல் வரைந்து கொடுத்து விடுவேன்...''

நேரந் தவறாத நபருக்குப் பத்திரிகை அலுவலகங்களில் இருக்கும் மதிப்பே தனி என்பது அங்கு வேலை பார்க்கிறவர்களுக்குத் தான் நன்றாகத் தெரியும். அந்த நபருக்குக் கூடவே திறமையும் இருக்கிறது என்பது சர்க்கரைப் பந்தலில் தேன் மாரி! எனவே ஸ்யாமுடைய குறுகிய கால வளர்ச்சியின் ரகசியம் அவர் ஓவியங்களைப் போலவே பளிச்!

'ஜெ.' for ஜெயராஜ்; ம. செ. என்றால் மணியம் செல்வன் என்ற பத்திரிகை ஓவியம் சம்பந்தமான அடிப்படை அகராதி கூடத் தெரியாமல் சென்னை வந்தவர் தான் ஸ்யாம். கல்கி பொன் விழா பரிசு பெற்ற நாவலுக்குத் தொடர்ந்து படம் போடும் நிலைக்கு உயர்ந்தார். அதைப் பார்த்து விட்டு, தமது தொடருக்கும் அவரே படம் போட்டால் நல்லது என்று சுஜாதா அபிப்பிராயப்பட, 'புதிய பார்வை' அலுவலகத்துக்குத் தந்தி அடித்து வரவழைக்கப்பட்டார்...

படம் போடச் சரியான இடமில்லாமல் கோடம்பாக்கம் ஜவுளிக் கடைத் திண்ணையில் உட்கார்ந்து வியர்க்க விறுவிறுக்க வரைந்தவர் இன்று குடும்பக் கடன்களையை ஏறத்தாழத் தீர்த்து விட்டார். சொந்தமாக ஒரு ஃபிளாட் வாங்கும் முயற்சிகளில் இறங்கியிருக்கிறார்...

'எந்நாளும் தளர்வறியா மனம்' + முகத்தில் எப்போதும் தவழும் புன்னகை = ஸ்யாம்.

– எஸ். ஆர்.

படம் : கோபிநாத்

''ரயில்வே கேட் மூடி இருக்கும் போது அதைப் பிடிக்க நின்னுகிட்டு வேடிக்கை பார்க்காதீங்கன்னு சொன்னேன்... அவர் காதில் வாங்கிக்கலை....''

– வி. கி. குமார்






## 23. சிறையில் ஒரு சதி!

நிர்மலமான நீலவானத்தில் ஒரே ஒரு மேகத் துணுக்கு மட்டும் தெற்கிலிருந்து மிதந்து வந்து கொண்டிருந்தது. வினாடிக்கு வினாடி அது தன் வடிவத்தைப் பலவிதங்களில் மாற்றிக் கொண்டே வந்தது. காற்றின் இடைவிடாத சலனம் அடியோடு நின்று போய், தென்னையும், பாக்கும் நிறைந்த அந்த மலைப்பகுதி அசைவற்று நின்றது. மந்திரம் போட்டாற்போல் அசைவற்று நின்ற மரங்கள் திடீரென்று ஒருமுறை சிலிர்த்து அடங்கின. எதிரே விரிந்த நீலக் கடலின் அலைகள் சீறிப் பாயத் தொடங்கின. எழுந்து மண்ணின் மீது ஏதோ கோபம் கொண்டது போல எல்லை கடந்து கரையின்



# ஜிஞ்ஜிக்சேனன்

மீது ஏறி ஆக்கிரமிக்கத் தொடங்கின அந்த அலைகள். முதலில் வந்த மேகத் துணுக்கு, பெரும் சூறாவளிக்கும் பெரு மழைக்கும் தலைமைதாங்கி வந்ததாக இருக்க வேண்டும். சற்று நேரத்தில் தெற்கிலிருந்து கறுத்த மேகக் கூட்டம் முழு வேகத்தில் படையெடுத்து வரத் தொடங்கியது. காற்றில் மெல்ல மெல்ல அசைய ஆரம்பித்த மரங்கள் விரைவிலேயே வில் போல் வளையத் தொடங்கின. சற்றே பழுத்த மட்டைகளும் காய்களும் மரங்களோடு உறவை முறித்துக் கொண்டு காற்றில் பறக்கத் தொடங்கின.

ஆடிய மரங்களையும், திரண்டு வந்த மேகங்களையும் சாளரத்தின் வழியே பார்த்தபடி நின்றிருந்த மாறவர்மனின் மனம் அந்த மரங்களை விட அதிகமாக அல்லல்பட்டுக் கொண்டிருந்தது. லேசான தூறலாகத் தொடங்கிய மழை அந்த மாளிகையை ஓங்கி அறைவது போலப் பெய்யத் தொடங்கியிருந்தது. மழைச் சாரலைப் பொருட்படுத்தாது சாளரத்தருகிலேயே நின்றிருந்தான் அவன்.

சேரர் படைத்தலைவன் கங்காதரன் உதவுவதாகச் சொன்ன படையைப் பாதியாகக் குறைத்துக் கொண்டதையும் மணம் பேச வந்த ஈழத்துத் தண்டநாயகன் தன்னைத் தட்டிக் கழிக்க முற்பட்டதையும் எண்ணி அவன் மனம் நொந்து போயிருந்தான். மார்த்தாண்டவர்மனது பெரு முயற்சியால் ஈழத்து மன்னனைக் காண ஈழத்திற்கு வந்ததான், அந்தக் கடலோரத்து மாளிகையில் விருந்தினனாகக் காலம் கழித்துக் கொண்டிருப்பதை எண்ணி எண்ணி அவன் தன் மீதே கழிவிரக்கம் கொண்டிருந்தான். இடையே பாண்டியன் மகளைப் பற்றிக் கூறிய சமுத்திரபந்தனின் நினைவு வேறு அவனை வாட்டியது.

இத்தகைய சிந்தனைகளினிடையில் அவன் இருந்ததால் சொட்டச் சொட்ட நனைந்தபடி மார்த்தாண்டனும், சோமகந்தரனும் மாளிகைக்குள் நுழைந்ததையோ உடையை மாற்றிக் கொண்டு வந்து அமர்ந்ததையோ கவனிக்கவில்லை. சோமகந்தரன் லேசாகச் செருமிக் கொண்ட ஒலி கேட்ட பிறகே திரும்பிய மாறவர்மன், ''நீங்கள் எப்போது வந்தீர்கள்? சென்ற காரியம் என்ன வாயிற்று'' என்றான்.

''இப்போதுதான் வந்தோம். மன்னரைச் சந்திக்க இயலவில்லை. இந்தச் சூறாவளி அடங்க ஒரு வாரகாலமாகும் என்றும் மக்களைக் கவனிப்பதே தற்போது முக்கியம் என்றும் மன்னர் கூறியதாக வீரபாகு தெரிவித்தார். மார்க்கீயனை விடுவிக்கச் சிலரை அனுப்பியிருப்பதாகவும் கூறினார்'' என்றான் சோமகந்தரன்.

மாறவர்மன் இகழ்ச்சியான சிரிப்பொன்றை உதிர்த்தான். ''காஞ்சிச் சிறையிலிருந்தாவது, மார்க்கீயனை மீட்பதாவது!''

''நீ இப்படி பேசுவது நியாயமல்ல மாறவர்மா. நமக்கு உதவ வந்தவனை நியாயமாக நாம்தான் மீட்க வேண்டும்'' - என்றான் மார்த்தாண்டன்.

"என் யோசனையைக் கேளாமல் கார்குழலியை உயிருடன் பிடிக்க முயன்றான் மார்க்கியன். அவளைக் கொன்று விட்டுச் சுலபமாகத் தப்பியிருக்கலாம். காஞ்சியின் சிறையிலிருந்து ஒருவனை மீட்பது என்பது எளிதான செயலா? நடக்கக் கூடியதாக ஏதாவது பேசலாம். ஈழத்து இளவரசியை எனக்கு மணமுடிப்பதாக இருந்தது ஏன் தாமதப்படுகிறது? படை உதவியை ஏன் தாமதப் படுத்துகிறார்கள்?" - மாறவர்மன் கேள்விகளை அடுக்கிக் கொண்டே போனான்.

"அதைக் கேட்கலாம் என்று பார்த்தால் மன்னரைச் சந்திக்கவே முடியவில்லையே? ஈழ மன்னனும் வீரபாகுவும் நம்மைத் தவிர்த்தாலும் ஈழத்து இளவரசன் பராக்கிரமபாகு நமக்கு உதவுவதாக வாக்களித்திருக்கிறான்" என்றான் மார்த்தாண்டவர்மன்.

இதே பராக்கிரமபாகுவால் தான் மாள இருப்பதையும் பாண்டிய நாடு பிற்காலத்தில் சீரழியப் போவதையும் அறியாத மாறவர்மன், இழந்த உற்சாகத்தை மீண்டும் பெற்றவனாய், பராக்கிரமபாகுவைப் பற்றி மார்த்தாண்டவிடம் ஆவலுடன் விசாரிக்கத் தொடங்கினான்.

காஞ்சியின் உயர்ந்த மதிலை ஒட்டி பலமாக அமைக்கப்பட்டிருந்த சிறைச்சாலையின் கதவுகள் கோட்டையின் கதவுகளைப் போல பலமாக இருந்தன. மதிலின் மீதும் தரையிலும் இரவும் பகலும் உலவிய வீரர்கள் கைகளில் ஏந்திய வேல்கள் சற்றேனும் தளர்ந்து இறங்கியதாகத் தெரியவில்லை. உணவு கொண்டு செல்லவும், விசாரணைக்குக் கைதிகளை அழைத்துச் செல்லவும் மட்டுமே திறக்கப்பட்ட பாதாளச் சிறையின் வாயில்கள் ஈ எறும்பைக் கூட உள்ளே அனுமதிக்காது என்பது பார்த்தவுடன் புரிந்தது. வாயிலை அடுத்து இறங்கிய படிகள் செங்குத்தாகவும் நெருக்கமாகவும் அமைந்திருந்தன. படிகள் முடிந்த இடத்திலிருந்து தொடங்கிய அறைகள் பலமான கம்பிகள் இடப்பட்டு சற்றே இருளில் ஆழ்ந்திருந்தன.

அவற்றுள் இறுதி அறையில் அடைபட்டுக் கிடந்த மார்க்கியன், தான் காஞ்சி சிறையைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தவை எத்தனை உண்மை என்பதை இதற்குள் நன்றாக உணர்ந்து கொண்டிருந்தான். அதிலிருந்து தப்புவதென்பது குதிரைக் கொம்புதான் என்று உள்ளம் கூறினாலும் தப்பிக்கும் மார்க்கத்தைத் தேடித் தேடி அவன் அறிவு சலித்துக் கொண்டிருந்தது. அங்கு அவன் அடைபட்ட நாளிலிருந்து சிறைக் காவல் இயங்கும் முறையைக் கவனித்தவன் வெளியிலுள்ள தனது நண்பர்கள் உதவியின்றித் தப்புவது என்பது இயலாத காரியம் என்ற முடிவுக்கு வந்திருந்தான்.

காவலர்களும் உயிருக்கு அஞ்சுபவர்களாகவோ, பொற்காசுகளுக்கு ஆசைப்படுபவர்களாகவோ தெரியவில்லை. நம்பிக்கையை முழுவதுமாக இழக்கும் நிலையிலிருந்த மார்க்கியனுக்குப் புத்துயிர் அளிக்கும் சம்பவம் ஒன்று விரைவில் நடந்தது.

உச்சிப் பொழுதில் திறக்கப்பட்ட கதவுகளை வெறித்து நோக்கிய மார்க்கியன் காவலர் உணவு கொண்டு வருவதைக் கண்டு சலிப்புடன் சென்று இருக்கையில் அமர்ந்தான். சோழன் ஆட்சியில் சிறை உணவு கூடச் சுவையாக இருந்தாலும் மனம் உணவருந்துவதில் ஆர்வம் காட்டவில்லை.

பெரிய கம்பிக் கதவின் இடையில் அமைந்த சிறு கதவின் மூலமே உணவு உள்ளே அளிக்கப்படும் என்பதைக் கண்டிருந்த மார்க்கியன், எப்போதும் போல தனக்குக் கடைசியாகவே உணவு வந்து சேரும் எனவும் உணர்ந்திருந்தான்.

கதவருகே வந்த காவலன் கையிலிருந்த வேலால் கம்பிகளில் பலமாகத் தட்டினான். "மார்க்கியா, உணவு வெறுத்து விட்டதா? வந்து பெற்றுக் கொள்" என்று இரைந்தான்.

வேண்டா வெறுப்புடன் இலையில் சுற்றிய உணவைப் பெற்றுக் கொண்ட மார்க்கியன், மீண்டும் இருக்கையில் வந்து அமர்ந்தான்.

'பசி வந்திடப் பத்தும் பறந்து போம்' என்ற பழமொழியை ஒருமுறை முணுமுணுத்துக் கொண்டவன் வெறுப்புடன் மெதுவாக உணவருந்த ஆரம்பித்தான்.

இரண்டு கவளம் விழுங்கியவன் உணவின் நடுவே ஏதோ ஒன்று தன் விரல்களில் நிரடுவதை உணர்ந்தான்.

உண்ணுவதை நிறுத்தி ஒருமுறை வாயிலைக் கவனித்தவன், காவலர் அங்கில்லாதது கண்டு துணிவடைந்து மெல்ல சோற்றிலிருந்து அப் பொருளை வெளியில் எடுத்தான். அவன் கையில் வந்தது ஒரு மெல்லிய நறுக்கோலை. நன்றாகத் துடைத்து அதை உற்றுநோக்கியவன் கண்களில் வியப்பு படர்ந்தது.

"விசாரணையின் போது தப்புவிக்க ஏற்பாடாகியிருக்கிறது. விழிப்புடனிரு - நண்பன்" ஒரே ஒரு வரி அதில் மிகச் சிறிதாக எழுதப்பட்டிருந்தது.

மார்க்கியன் மனத்தில் மீண்டும் தெம்பும் உற்சாகமும் தலையெடுத்தன. நண்

"ஏட்டு ஏகாம்பரம் அவரோட சுயசரிதையை ஆங்கிலத்துல புத்தகமா எழுதியிருக்கார்!"

"புத்தகத்துக்கு என்ன தலைப்பு?"

"மாமூல் டேஸ்!"

- எஸ். முகம்மது யூசுப்

பர்களின் திறமையை வியந்தவன் உற்சாகமாக உணவருந்தினான்.

**ப**ல்லவராயர் பெரும் சிந்தனையிலிருந்தார். அவரது அகன்ற நெற்றியில் கீற்றுக்களாக மூன்று கோடுகள் விழுந்து கிடந்தன.

அமைச்சரின் உதவியாளனும், பெரும் வீரனும், காஞ்சிக் கோட்டைத் தலைவனுமான நீலகண்ட சேதிராயன் அவர் சிந்தனையைக் கலைக்கத் துணிவின்றி மௌனமாகக் கைகளைக் கட்டியபடி காத்திருந்தான்.

நீண்ட நேரம் கழித்து கண்களைத் திறந்த அமைச்சரின் பார்வை சாளரத்தின் வழியே வெளியே பாய்ந்தது. காஞ்சியின் உயர்ந்த கோபுரங்களும், மாட மாளிகைகளும் காலை வெயிலில் கதிரவன் ஒளியில் மின்னின. ஒரு கோபுரத்தின் உச்சியிலிருந்து ஜிவ்வென்று கிளம்பிப் பறந்த புறாக் கூட்டமொன்று வானத்தில் ஒரு சுற்றுச் சுற்றி விட்டுத் திரும்பி இருப்பிடம் வந்து அமர்ந்தது.

கழுத்திலிருந்த மகரகண்டிகையை விரல்களால் நெருடிக் கொண்டே பேச ஆரம்பித்தார் அமைச்சர்.

''நீலகண்டா!''

ஆஜானுபாகுவான நீலகண்டசேதிராயன் நிமிர, அவன் தலை கூரையை இடித்து விடுவது போல உயர்ந்ததே தவிர, குரலில் பணிவு நிரம்பியிருந்தது.

''காத்திருக்கிறேன் அமைச்சரே.''

''மாறவர்மன் இருப்பிடம் பற்றி ஏதேனும் தெரிந்ததா?''

''இல்லை அமைச்சரே! அதைப் பற்றிக் கண்டறிந்து வரச் சென்ற ஜெயந்தனின் உதவியாளன் இன்னும் திரும்பி வரவில்லை.''

''சேரநாடு சென்ற மார்த்தாண்டன் என்னவானான்?''

''அவன் இப்போது அங்கிருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் எங்கிருக்கிறான் என்றும் புலப்படவில்லை.''

''சேரலாதன் படைகள்?''

''மலைக்கணவாயின் மறுபுறத்தில் காத்திருக்கின்றன அமைச்சரே.''

''பாண்டிய நாடு மிக அமைதியாயிருக்கிறது.''

''ஆம், அமைச்சரே.''

இந்த அமைதி பெரும் போருக்கு முன்னோடி என்பதைத் தெளிவாக உணர்ந்திருந்த பல்லவராயர், சோழப் படைகள் விரைந்து வந்து சேர்ந்தால்தான் சோழ நாட்டைக் காக்க இயலும் என்று புரிந்ததால் மீண்டும் கவலையுடன் சிந்தனையில் ஆழ்ந்தார்.

வாசலில் வீரன் ஒருவன் வெகு வேகமாக உள்ளே நுழைவது பலகணி வழியே தெரிந்தது.

**அ**வனது புழுதி படிந்த உடையும் கலைந்து கிடந்த குழல்களும் நீண்ட பயணத்திற்குப் பின் சிரமப்பரிகாரம் கூடச் செய்து கொள்ளாது வருகிறான் என்பதைப் புரிய வைத்தன. ஆனால் நெடும் பயணத்திற்குப் பின் காணப்பட வேண்டிய களைப்போ ஆயாசமோ அவன் முகத்தில் இல்லாமல் மகிழ்ச்சியும் உற்சாகமும் தென்பட்டன. அதனால் அமைச்சர் அவன் கொண்டு வரும் செய்தியையும், எங்கிருந்து வருகிறான் என்பதையும் ஒருவாறு ஊகித்து, அவன் நெருங்கி வந்து வணங்கியதுமே ஓலையைப் பெறத் தமது வலது கரத்தை நீட்டினார். ''மன்னர் கிளம்பி விட்டாரா?'' என்று ஒரு கேள்வியும் எழுப்பினார்.

அந்த வீரன் முகத்தில் வியப்பு மலர்ந்தது. தன் கச்சையிலிருந்து இரு ஓலைக் குழல்களை எடுத்து நீட்டியவன், ''கிளம்பி விட்டார் பிரபு'' என்று பதிலும் அளித்தான்.

முத்திரையை உடைத்து ஓலைகளைப் படிக்கத் தொடங்கிய அமைச்சரின் முகத்தில் உற்சாகம் படர்ந்தது. எதிரில் நின்ற நீலகண்டனுக்கு விஷயம் என்னவென்பது விளங்கா விட்டாலும் அவனையும் அந்த மகிழ்ச்சி தொற்றிக் கொண்டது.

ஓலைகளைக் கவனமாகப் படித்து முடித்த அமைச்சர் நிம்மதிப் பெருமூச்சொன்றை வெளியிட்டார்.

அதற்கு மேல் பொறுக்காத நீலகண்டன், ''அமைச்சரே, அந்த நல்ல சேதியை நானும் அறியலாமா?'' என்று ஆவல் தெறிக்கக் கேட்டான்.

''நீலகண்டா, சாளுக்கிய விக்கிரமாதித்தனைத் துங்கபத்திரையின் அக்கரைக்குத் துரத்தியாகி விட்டது. ஐந்தாறு கோட்டைகளும் நம் வசமாகியிருக்கின்றன.''

''அப்படியா!''

''அது மட்டுமல்ல. சாளுக்கியரின் ஆயிரம் போர் யானைகளைக் கைப்பற்றியிருக்கிறான் மதுராந்தகன்!''

''யார் அரையன் மதுராந்தகனா?''

''ஆம். கவியின் சீடன் லேசுப்பட்டவனல்ல'' அரையனைச் சிலாகித்த அமைச்சர் முகத்தில் பெருமை விரிந்தது.

கழுத்திலிருந்த மகர கண்டிகையைக் கழற்றிய அமைச்சர் அதை அந்த வீரனிடம் நீட்டினார். ''வீரனே நீ கொண்டு வந்த செய்திக்குப் பரிசு இது; பெற்றுக் கொள். போரைப் பற்றிய முக்கிய செய்திகளைக் கூறு'' என்றார்.



''பிரபு, நம் இளவரசர் ராஜராஜரை ஜெயதுங்கன் மறைந்திருந்து தாக்கி நவிலைக் கோட்டையில் சிறை வைத்து விட்டான்.''

''என்ன?'' இரு குரல்களும் சேர்ந்து ஒலித்தன அங்கு.

''ஆனால் அன்று இரவு முடிவதற்குள் மதுராந்தகன் இளவலை மீட்டதோடு ஜெயதுங்கனை அவன் கோட்டையிலேயே வாட்போரில் கொன்று விட்டான். அங்கிருந்த ஆயிரம் யானைகளையும் கைப்பற்றினான்.''

அமைச்சரும் நீலகண்டனும் பிரமித்து நின்றனர். ஜெயதுங்கனை வாட்போரில் வெல்ல குலோத்துங்கனையும் விக்கிரமனையும் தவிர எவராலும் இயலாது என்று அதுவரை எண்ணியிருந்தவர்களுக்கு இந்தச் செய்தி பெரும் வியப்பை அளித்தது.

வீரன் தொடர்ந்தான் :

''ஓலையில் கண்டுள்ள செய்தியையும் நமது வெற்றியையும் அதிகம் பரவ விடாமல் பார்த்துக் கொள்ளுமாறு எச்சரித்தார் மன்னர்.''

''சரி நீ அரண்மனையிலேயே தங்கலாம். சென்று வா'' என்று உத்தரவு கொடுத்தார் அமைச்சர்.

நீலகண்ட சேதிராயனைத் திரும்பி நோக்கிய அமைச்சர், ''நீலகண்டா செய்தி உன்னுடனேயே இருக்கட்டும். எச்சரிக்கை! இதைப் பற்றி யாரிடமும் மறந்தும் மூச்சு விடலாகாது'' என்றார்.

''உத்தரவு அமைச்சரே.''

''சரி. நீ மாறவர்மனைப் பற்றியும், அவ னிருப்பிடத்தைப் பற்றியும் அறியும் வழியைப் பார்'' என்றார் அமைச்சர்.

''மார்க்கியனை விசாரித்தால் ஏதேனும் தகவல் கிடைக்கலாம்'' என்றான் நீலகண்டன்.

நீலகண்டனது யோசனை சரியென்று பட்டதால் அமைச்சர் அவனைத் தக்க காவலுடன் அழைத்து வர ஆணையிட்டார்.

(தொடரும்)

---

# ஒரு வித்தியாசமான பொன் விழா!

ஒரே தெருவில் வசித்து வரும் ராம்ஜி – ரமாமணி நண்பர்கள், அடிக்கடி பள்ளி நாட்களைப் பற்றிப் பேசி நினைவுகளில் மூழ்கித் திளைத்த போது மற்ற நண்பர்களையும் ஒன்று சேர வைத்தால் என்ன என்ற ஆசை பிறந்தது.

பள்ளியின் பழைய ரிகார்டுகளை ஆராய்ந்து, 1943 ஆம் ஆண்டு இறுதிப் பரீட்சை எழுதி முடித்த மாணவர்களின் பெயர்ப் பட்டியல் தயாரித்தார்கள். அவர்கள் இப்போது எங்கே இருக்கிறார்கள் என்று கண்டுபிடித்து, கடிதம் அனுப்பி, கமிட்டி போட்டு இயங்கினார்கள். டி. ஐ. க்ரூப் தொழில் நிறுவனங்களின் அதிபர் எம்.வி. அருணாசலம், ஸ்ரீநிவாஸ பெருமாள் கோயில் அர்ச்சகர் பாஷ்யம், விளையாட்டுத் துறையில் 'ஃபுட்பால் மணி' 1600 திரைப்படங்களுக்கு ஒலிப்பதிவு செய்துள்ள கின்னஸ் சாதனையாளர் சுவாமிநாதன்... என்று கூட்டம் சேரச் சேர அறுபத்தைந்து வயது 'மாணவர்கள்' அனைவருக்கும் உற்சாகம் பிடிபடவில்லை. தாங்கள் படித்த சென்னை, மயிலாப்பூரில் உள்ள பி.எஸ். உயர்நிலைப் பள்ளியில் 'பொன் விழா' (1943–1993) கொண்டாடினார்கள்.




விழா நாளில் ஒன்று சேர்ந்த பெரியவர்கள் ஒருத்தரையொருத்தர் தோளில் தட்டி, ரொம்ப காஷுவலாக 'டா' போட்டுப் பேசுவதைப் பார்க்கவே வித்தியாசமாக இருந்தது. அந்தஸ்தை மறக்கடித்த அந்த விழாவில் கலந்து கொண்ட மூன்று ஆசிரியர்களுக்கு மட்டுமே ஸ்பெஷல் மரியாதை. 'மாணவர்களின்' சராசரி வயதே 65 எனும் போது ஆசிரியர்கள் வயதை நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள்.

விழா மலர் ஒன்று தயாரித்து வெளியிட்டார்கள். ஒரு லட்ச ரூபாய் நிதி திரட்டி பள்ளிக்கு ஒலி அமைப்புக் கருவிகளும் வி.சி.பி.யும் வாங்கிப் பரிசளித்தார்கள்.

தங்கள் யோசனை செயலாகி விட்டதில் ரமாமணி, ராம்ஜிக்கு மிகப் பெரிய திருப்தி!

– ஜெயா சுந்தரம்

# தமிழக அரசியல் வானில் வாண வேடிக்கை!

**எ**ழுபத்து நாலு வயதான டாக்டர் மரி சென்னாரெட்டி, கடந்து வந்த அரசியல் பாதையை நோக்குபவர்களுக்குப் பரமபத விளையாட்டு ஞாபகம் வராமல் இருக்க முடியாது. மனத்தில் பட்டதைப் பட்டென்று சொல்லும் இயல்புடையவர் ஆதலால் எதிரிகள் ஏராளம். போதாததற்கு அவரை நோக்கி வீசப்பட்ட ஊழல் குற்றச்சாட்டுக்கள் வேறு.

'அனல் பறக்கும் ஆந்திர அரசியல் போதாதா, இவர் வேறு எதற்கு அதை மேலும் ஊத வேண்டும்' என்று காங்கிரஸ் தலைமை கருதி, அவ்வப்போது இவரைக் கௌரவமாக கவர்னர் பதவி ஏற்கும்படி கேட்டுக் கொண்டதுண்டு. இத்தனைக்கும் ''காங்கிரஸில் சேருவதைவிட கிருஷ்ணா (நதியில்)வில் விழுந்து தற்கொலை செய்து கொள்ளலாம்'' என்று ஒருமுறை சொன்னவர்தான் சென்னாரெட்டி! நான்கு முறை காங்கிரஸை விட்டு வெளியேறி மீண்டும் சேர்ந்திருக்கிறார்.

**ப**ண்ணையார் குடும்பத்தில் பிறந்து உஸ்மானியாவில் டாக்டருக்குப் படித்து, ஹைதராபாத் சுல்தான் பஜாரில் பிராக்டிஸ் செய்து கொண்டிருந்த சென்னாவுக்கு, மாணவர் காங்கிரஸில் பிடிப்பு ஏற்பட்டது.

சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட பெரும்பாலான அந்தக்கால இளைஞர்களைப் போல் சென்னாவும் பாடுபட்டார். ஜெயிலுக்குப் போனார்.

ஹைதராபாத் வாசிகளுக்கு

> அனைவரும் ஜில் தண்ணீர் குடிக்க வேண்டுமென்பதற்காக, ஒரு டிரக்கில் ஏகப்பட்ட ஐஸ் கட்டிகளைக் கொண்டு வந்து கிணற்றில் போட இவர் ஏற்பாடு செய்தார் என்றெல்லாம் சொல்லப்படுகிறது.



✱ பதவியேற்பு விழா....

ஆங்கிலேயரை நேரடியாக எதிர்த்துப் போராட வாய்ப்பு இல்லை. காரணம், அவர்களுடைய அடிவருடியான நிஜாம் ஆண்டு கொண்டிருந்தார். ஆகவே சென்னா ரெட்டி போன்ற இளைஞர்கள் நிஜாமை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது. சென்னா நடத்திய 'ஹைதராபாத்' என்ற பத்திரிகை நிஜாமை எதிர்த்துக் கனலைக் கக்கியது.

நாடு விடுதலை அடைந்த பிறகு சென்னாவின் அரசியல் வாழ்க்கையில் ஏற்றம்தான். ஹைதராபாத் சட்டமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு

## கலகல கரியப்பா!

தளபதி கரியப்பா வீரர், நேர்மையாளர், திறமையாளர், கண்டிப்பானவர். அத்துடன் நகைச்சுவை உணர்வு மிக்கவர். ஒரு சமயம் மேற்குப் பகுதியில் ஒரு பட்டாளத்தை மேற்பார்வையிடச் சென்றார். அதிகாரிகளுக்கான கான்டீனில் அவரை வரவேற்று டீயும் பிஸ்கட்டுகளும் தரப்பட்டன. உதட்டருகே கொண்டு போய் டீயை ருசி பார்த்தாரோ இல்லையோ அவர் முகம் அஷ்டகோணலாக மாறியது. 'என்ன, என்ன?' என்றனர் உடனிருந்த அதிகாரிகள்.

"இதோ பாருங்க, இது டீன்னா எனக்கு ஒரு கப் காப்பி கொண்டுவரச் சொல்லுங்க; அல்லது ஒருவேளை இது காப்பின்னா எனக்கு ஒரு கப் டீ கொண்டு வரச் சொல்லுங்க!" என்றார் கரியப்பா.

- பிரிகேடியர் என். ஆர். சுப்பிரமணியம்



அமைச்சரானார். ஆனால் ஊழல் குற்றச்சாட்டுக்கள் காரணமாக ராஜினாமா செய்ய வேண்டியிருந்தது. (தேர்தலில் ஜெயிப்பதற்கு ஊழல் வழிகளைக் கையாண்டார் என்ற குற்றச்சாட்டில் ஆறு வருடங்கள் தேர்தலில் நிற்கத் தடை விதிக்கப்பட்டவர்தான் சென்னா.)

காங்கிரஸ் தன்னைக் கைவிட்டு விட்டதென்று கூறி சுதந்திராக் கட்சியில் சேர்ந்தார். என்.ஜி. ரங்காவுக்கு சிஷ்யரானார். ஆனால் தனது கொள்கைகளுக்குச் சுதந்திரா கட்சி சரியான இடம் இல்லை என்று கருதி மீண்டும் காங்கிரஸில் இணைந்தார். மாநிலத்திலும் மத்தியிலும் அமைச்சர் பதவிகள் கிடைத்தன.

காங்கிரசை விட்டு வெளியேறிய ஒரு கால கட்டத்தில் சென்னாரெட்டி துவங்கியதுதான் தனித் தெலுங்கானா போராட்டம். இந்தப் போராட்டம் அவரைத் தேசிய அளவில் அறிமுகப்படுத்தியது.

**ஆ**ந்திர முதல்வராக சென்னா இருந்த போது ஹைதராபாதில் கலவரங்கள் வெடித்தன. அப்போது அங்கு சென்ற காங்கிரஸ் தலைவர் ராஜீவைச் சந்திக்காமல் , ''வேண்டுமானால் அவர் வந்து சந்திக்கலாமே'' என்று சொன்னார் - பதவி இழந்தார்.

**செ**ன்னாவுக்கு மந்திர, தந்திரங்களில், ஜோசிய ஜாதகங்களில் நம்பிக்கை அதிகம் என்று சொல்லப்படுகிறது. இவர் கையில் வைத்திருக்கும் 'மந்திரக்கோல்' ஆந்திராவில் உள்ள மேட்செல் பாபா என்பவர் 1978 ல் இவருக்குக் கொடுத்ததாம். கோலின் உள்ளே கத்தியும் உண்டாம்!

இவரது சஷ்டியப்தபூர்த்தி கொண்டாடுவதற்காக, சுமார் ஐந்து கோடி வசூல் செய்யப்பட்டது; இவரது உறவினர் திருமணம் ஒரு கிராமத்தில் நடைபெற்ற சமயம், அனைவரும் ஜில் தண்ணீர் குடிக்க வேண்டுமென்பதற்காக, ஒரு டிரக்கில் ஏகப்பட்ட ஐஸ் கட்டிகளைக் கொண்டு வந்து கிணற்றில் போட ஏற்பாடு செய்தார் என்றெல்லாம் சொல்லப்படுகிறது.

அடுத்த நிமிஷம் என்ன நினைப்பார், எப்படி நடந்து கொள்வார் என்றே ஊகிக்க முடியாத விதத்தில் செயல்படுபவரான சென்னாரெட்டி இங்கு ஆளுனராகப் பதவி ஏற்றிருப்பதால், தமிழக அரசியல் வானில் இனி வாண வேடிக்கைதான்!

- தில்லப்பா

# அதிகப்பிரசங்கம் பலே ஜோர்!

கல்கி ஜூன் 1, 10, 20 இதழ்கள்

## புற்றிலிருந்து பாம்பு!

விம்லா
24.5.43

கொஞ்ச நாளைக்கு முன்பு சாத்தூர் சுப்பிரமணியத்தைப் பற்றி எழுதுகையில் "எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ" என்று எழுதியிருந்தீரல்லவா? நேற்று தரை மட்டத்திற்கு 7000 அடி உயரத்திற்கு மேல் உள்ள இந்த விம்லா வெனப்படும் கைலயங்கிரியில் சாத்தூரின் கச்சேரி கேட்கக் கூடிய பாக்கியம் கிடைத்தது. நீர் சொல்லிய புற்றிலிருந்து வெளிவந்த பாம்பு சாதாரணப் பாம்பல்லவென்று தெரிய வந்தது. கச்சேரி ஒண்ணாங் கிளாஸ்.



முக்கியமாக, சங்கராபரண ராக ஆலாபனையைப் பற்றியும், கல்யாணி ராகத்தில் கையாளப்பட்ட சுருதி பேத முறையைப் பற்றியும் குறிப்பிட வேண்டும். சங்கராபரண ராகத்தைப் பற்றிச் சொல்லும் போது, அதில் பாடப்பட்ட பல்லவியைப் பற்றிச் சொல்லாமலிருக்க முடியவில்லை. இதைக் கேளுங்களய்யா!

"சங்கராபரணனை, அழைத் தோடி-வாடி, கல்யாணி, தர்பாருக்கு."

பல்லவி அமைப்பு எப்படி?

விசேஷமாய்ப் பாகவதர் இந்தப் பல்லவியில் கையாண்ட பங்கிடுமுறை எனக்குப் பிடித்திருந்தது. ஒவ்வொரு ராகத்திற்கும் ஒரு 'ததிங்கிணதோம்' கொடுத்து, ஸ்வரம் பாடியது, ரொம்பவும் அற்புதமாயிருந்தது. தோடியில் நிரவல் செய்யும் போது, ஷட்ஜமத்தையும் பஞ்சமத்தையும் தொடாமல் 'கமதநிரிகரி நித மதமகரிநி' என்று விளாசிவிட்டார்.

தென்னாட்டிலின்று 2000 மைல் தூரத்தில் காய்ந்து கிடந்த எங்களுக்கு இது உண்மையில் ஓர் இன்னிசை விருந்தாகவே யிருந்தது.

சாத்தூராருக்கு ஒரு சின்ன விண்ணப்பம். தமிழ்க் கீர்த்தனங்கள் பாடும் போது இன்னும் திருத்தி அர்த்த புஷ்டியுடன் பாட வேண்டும். 'நீ இரங்காயெனில்' பாடிய போது, அவர் பட்ட அவசரத்தைப் பார்த்தால், யாரோ மரத்தின் மேல் உட்கார்ந்திருப்பது போலும் இறங்கா விட்டால் பல்லை உடைத்து விடுவார் போலும் நினைக்கத் தோன்றியது.

சரியான புள்ளிகளைப் பொறுக்கி அவர்களை ஆதரித்தெழுதும் கொள்கை கொண்ட "கர்நாடக"த் துக்கு வந்தன மளிப்பதுடன் என்னுடைய அதிகப் பிரசங்கத்தை நிறுத்திக் கொள்கிறேன்.

- சுப்புடு

(அதிகப் பிரசங்கம், பலே ஜோர், ஐயா! - ஆசிரியர்.)

- வட்டமேஜை

## தமிழ் வளர்ச்சி

வடமொழிக் கலப்பால் தமிழ் புத்துயிர் பெற்றுப் பெரு வாழ்வு வாழ்ந்தது என்பது நிச்சயம்.

பிற்காலத்திலே அரபி, பார்ஸி, உர்து முதலான பாஷைகளிலிருந்தும் திசைச் சொற்கள் தமிழில் வந்து கலந்த வண்ணமாயிருந்தன. 'சபாஷ்' என்ற உர்து வார்த்தை சிவநேசச் செல்வரான குமர குருபர சுவாமிகளின் செந்தமிழ்ப் பிரபந்தத்திலும் குடியேறி விட்டது. ஆங்கிலேயர் முதலான ஐரோப்பியர்களோடும் அவர்களுடைய சரக்குகளோடும், அந்த மேற்குத் திசைச் சொற்களும் இறக்குமதியாகித் தமிழோடு கலந்து விட்டன. "ஐயோ! தொட்டு விடாதே! தமிழைத் தூய தமிழாக வைத்துக் கொள்ளப் போகிறோம்!" என்று சொல்லி இத்தகைய தமிழ் வளர்ச்சியைத் தடுக்க முடியுமா?



ஒரு பாஷைக்குப் பழமை என்ற பெருமை மட்டும் போதாது; வளர்ச்சி அடைய உரிமையும் வேண்டும். 'தூய தமிழ்' என்ற பெயரால் பாஷையுலகில் கூடத் 'தீண்டாமை'யை வைத்துக் கௌ்ள முடியாது.

- பி.ஸ்ரீ. கட்டுரையில் ஒருபகுதி



## எங்கள் மாமா

● மாமாவுக்கு ஜோதிஷத்தில் அபார நம்பிக்கை. யாராவது சற்று ஜோதிஷம் தெரிந்தவர்கள் வந்து விட்டால் போதும், உடனே தம் ஜாதகத்தை அவர்களுடன் ஆராய ஆரம்பித்து விடுவார். உடனே குரு சனியைப் பார்ப்பான், சனி புதனைப் பார்ப்பான், புதன் லக்கினத்தைப் பார்ப்பான், லக்கினம் மாமாவைப் பார்க்கும், மாமா சிநேகிதரைப் பார்ப்பார், சிநேகிதர் என்னைப் பார்ப்பார், நான் ஆகாயத்தைப் பார்ப்பேன்!

- 'நாடோடி' கட்டுரையில் ஒரு பகுதி

## காதல் நோய்

வேடிக்கை என்னவென்றால், சாம்பமூர்த்தியும் ரங்கநாயகியும் தங்களைக் காதல் நோய் பிடித்திருக்கிறது என்று தெரிந்து கொள்வதற்கு முன்னாலேயே அந்த விஷயத்தை வீட்டிலுள்ள மற்றவர்கள் தெரிந்து கொண்டார்கள். இதிலே ஆச்சரியமும் இல்லை. ஏனெனில், எப்பேர்ப்பட்ட கெட்டிக்காரர்களானாலும் காதலுக்கு வசமாகி விட்டால் அவர்கள் முகத்தில் ஒரு மாதிரி





அசடு தட்டி விடுகிறது. அவர்கள் ஒருவரையொருவர் பார்க்கும்போது அசடு வழியப் பார்க்கிறார்கள்; அசடு வழியப் பேசுகிறார்கள். அவர்களுடைய நடை, உடை, பாவனை எல்லாமே ஒரு மாதிரி மாறுதல் அடைந்து காணப்படுகிறார்கள். இதையெல்லாம் மறைத்துக் கொள்ளும் சக்தியும் அவர்களுக்கு இருப்பதில்லை.

- "கல்கி", 'என் தெய்வம்' குறுநாவலில் ஒரு பகுதி

**50** ஆண்டுகளுக்கு முன்...

# பாலம்

●● எமது நூலக அருங்காட்சியகம் சார்பில் இதழ்கள் கண்காட்சி நடத்த உள்ளோம். அன்பர்கள் தங்களிடம் உள்ள முதல் இதழ்கள், பழைமையான நாளிதழ்கள், திங்கள், வார இதழ்கள் எம்மொழியில் இருப்பினும் அனுப்பி வைத்து உதவலாம்.

– ஈ. நாகராஜன்,
அண்ணாநூலக அருங்காட்சியகம்,
கன்னிகாபுரம், காஞ்சிபுரம் – 631 503.

●● என் சகோதரியின் கண்கள் tubular vision ஆல் பாதிக்கப்பட்டுள்ளன. நேராக மட்டுமே பார்க்க முடியும். பக்க வாட்டில் எதுவுமே தெரியாது. மாலை நேரங்களில் நேர் பார்வையும் மங்கலாகி விடுகிறது. இந்நோயினால் பாதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று குணமடைந்தவர்கள் தயவு செய்து தொடர்பு கொள்ளவும்.

– கே. அனுராதா
78/4, இந்திரா காலனி,
அசோக் நகர், சென்னை – 83.

●● சிவில் சர்விஸஸ் தேர்வுக்குப் படிக்க விருப்பதால், சம்பந்தப்பட்ட நோட்ஸ் அல்லது புத்தகங்கள், இலவசமாகவோ குறைந்த விலைக்கோ கொடுக்க விரும்பமுள்ளவர்கள் தொடர்பு கொள்ளவும்.

– ஜே. சுதாகர்,
9/2, திரு.வி.க. தெரு,
விநாயகபுரம், அம்பத்தூர்,
சென்னை – 600 053.

●● டிடர்ஜண்ட் சோப் தொழில் நன்கு அறிந்த யாராவது எனக்கு உதவ முன் வந்தால் அவருக்கும் கைமாறு செய்து நானும் பயன் பெற விரும்புகிறேன்.

– எஸ்.எம். விஜயரங்கம்,
16-A, சார்லஸ் நகர்,
சென்னை – 600 072.

●● தமிழ் நாட்டின் பழம் மழலைச் சந்தப் பாடல்கள் தொகுத்து வருகிறேன். வழி வழியாக வந்த குழந்தைப் பாடல்களை அறிந்தவர்கள் எழுதி அனுப்ப வேண்டுகிறேன்.

– தம்பி சீனிவாசன்,
F-63 B, Hari Nagar,
MIG Flats, New Delhi - 110 064.

●● நல்ல நிலையில் SEMCO எலாஸ்டிக் மிஷின் விற்பனைக்கு உள்ளது. வாங்குபவர்களுக்கு, உற்பத்தி செய்யும் முறை, விற்பனை இடங்கள், வாய்ப்புக்கள் முதலியவையும் தெரிவிக்கப்படும்.

– எம். பழனிச்சாமி,
எலாஸ்டிக் கம்பெனி,
36-A, ஐந்தாவது விநாயகர் கோவில் வீதி,
மூலப்பாளையம், ஈரோடு – 2.

●● தஞ்சாவூர் வண்ணப்படங்கள் உள்ளன. கணபதி, சுப்பிரமணியன், புவனேஸ்வரி, கண்ணன்-யசோதை. விலைக்குத் தரப்படும்.

– எம்.கே. பீதாம்பரம்,
D-7/8, DRDO Township,
Bangalore - 560 093.

●● சென்னை அண்ணா நகரிலிருந்து பாரிமுனை அலுவலகங்களுக்கு மாத வாடகையில் செல்லும் (Van) வாகன உரிமையாளர்கள் இடவசதி இருப்பின் தொடர்பு கொள்ளவும். மேலும் இதே வசதியைப் பெற விரும்புவோர் தொடர்பு கொண்டால் ஏற்பாடு செய்யச் சௌகரியம்.

– பி.என். சுப்பிரமணியம்,
AB 110, சாந்தி காலனி,
அண்ணாநகர், சென்னை – 600 040.
ஃபோன் : 6268522



●● ரப்பர் ஸ்டாம்பு செய்து சுய தொழிலில் ஈடுபட விருப்பம். தேவையான உபகரணங்கள் உடையவர்கள் 'லெகண்டில்' விற்க விரும்பினால் தொடர்பு கொள்ளவும். செய்முறை ஆலோசனைகளும் வழங்க வேண்டும்.

– என். ராஜ்குமார்,
422-A, ரயில்வே காலனி,
தாம்பரம், சென்னை – 600 045.

●● சேஷாத்திரி அம்மாள், ராஜ நாயகன் தோட்டம், மேற்கு மாம்பலம், சென்னை 33 என்ற விலாசம் கிரய பத்திரத்தில் உள்ளது. ஆனால் மூன்று கடிதங்கள் எழுதியும் பலனில்லை; திரும்பிட்டன. மேற்படி விலாசத்தில் 1983 ஆகஸ்டில் வசித்து வந்துள்ள சேஷாத்திரி அம்மாள் இப்போது எங்கிருந்தாலும் தொடர்பு கொள்ளவும். மூன்று மனைகள் சம்பந்தமான வியாஜ்ஜியம் சென்னை உயர் நீதிமன்றத்தில் ரிட் மனுமூலம் விவாதிக்கப்படவுள்ளது.

– ஆர். பரமேஸ்வரன்,
18, ஒன்பதாம் குறுக்குத் தெரு
விரிவாக்கம், வானவில் நகர்,
பாண்டிச்சேரி – 605 011.

(பாலம் மூலம் இணையும் அன்பர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பு ஏற்க இயலாது.
ஆர்.)




- எஸ். ஏ. சரவணகுமார்




- அம்பை தேவா

மனைவி : ஓடிப் போன நம் மகன் தயங்கித் தயங்கி வீட்டு வாசலில் வந்து நின்னுக்கிட்டிருக்காங்க...!

கணவன் : அதுசரி, பிளஸ் டூ ரிசல்ட்டைப் பார்த்துட்டு ஓடிய மூத்த மகனா? எஸ். எஸ். எல். சி. ரிசல்ட்டைப் பார்த்துட்டு ஓடிய இரண்டாவது மகனா? எட்டாம் வகுப்பு ரிசல்ட்டைப் பார்த்துட்டு ஓடிய கடைசி மகனா? எந்த மகன்?





- க. ராஜேஸ்வரி

அமைச்சர் : வட்டச் செயலாளருக் கெல்லாம் உயிருக்கு என்னய்யா ஆபத்து? ஏ.கே.-47 துப்பாக்கியோட பூனைப்படை பாதுகாப்புக் கேட்கறீங் களே?

வ. செயலாளர் : ஐயய்யோ, அப் படிச் சொல்லிடாதீங்க; வேலைக்காக என்னிடம் பணம் கொடுத்து ஏமாந்த 837 பேரால் என் உயிருக்கு எந்த நிமிடமும் ஆபத்து வரலாம்!

# சூப்பர் சுறுப்பாக ஓடிய மாயக் குதிரை!

◆ தென்னாற்காடு மாவட்டம் சேலத்தில் ஒரு ஆங்கில வழிப் பள்ளியை இந்த ஆண்டுதான் துவக்குகிறார்கள். ஒரு எல்.கே.ஜி. குழந்தைக்குக் கட்டணமாக 25 வகையறாக்களுக்கு மொத்தமாக ரூ. 2250! அதில் ஒன்று 'மற்றவை' என்பதாகும். எல்லாவற்றிற்கும் கட்டணங்களை எழுதிவிட்டு அப்புறம் 'மற்றவை' ரூ. 75 எனில் அது எதற்கு?

கெங்கவல்லி, பூங்குழலி.

◆ இன்றைய நடுத்தர வர்க்கத்தினரின் இக் கட்டை 'பள்ளி திறக்கிறது; பணத்துக்கெங்கே போவது?' கவர் ஸ்டோரி அற்புதமாக விளக்கியது!

மதுரை - 10, பி. ராஜசேகரன்.

◆ 'பள்ளி திறக்கிறது பணத்துக்கெங்கே போவது' என்ற அட்டைப்படக் கட்டுரையில் கல்விச் செலவுகளுக்கு எந்தெந்த வகையில் பணம் சேமிக்கலாம் என்று விரிவாகக் குறிப்பிட்டிருந்தால் உபயோகமாக இருந்திருக்கும். மாறாக, அக் கட்டுரை அரும்பாடுபட்டு கல்விப் பணி ஆற்றி வரும் தனியார் பள்ளிகளை மிகையாகக் குறைகூறி விமர்சிப்பதாக இருந்தது.

சென்னை - 20, ருக்மிணி ராமச்சந்திரன்,
தலைமை ஆசிரியை, கப்ரூஜா மாண்டிசோரி பள்ளி.

◆ 'ஜன்னல் அருகே ஓர் உலகம்' என்ற கட்டுரையில் டெல்லி ஃபிஷ்ம் சொஸைட்டியைத் துவக்கியவர்களுள் ஒருவர் என என்னைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அவ்வமைப்பு ஆரம்பிக்கப்பட்ட போது நான் வெளிநாட்டில் இருந்தேன். பின்னர் அதன் நிர்வாகக் குழு உறுப்பினராகச் செயல்பட்டதுண்டு.

சென்னை - 90, காந்திமதி சாஸ்திரி.

◆ ''ஜன்னல் அருகே ஓர் உலகம்'' என்ற கட்டுரை எங்களை உலுக்கிற்று. எங்கள் வளமான வாழ்க்கைக்கு உத்தரவாதம் அளித்தது.

சென்னை - 2, இரா. செயராமன்,
கவியரசு கண்ணதாசன் கழகம்.

◆ பிளாக்கில் டிக்கெட் விற்பவரும் சரி, அதற்கு உறுதுணையான தியேட்டர் உரிமையாளர்களும் சரி.... 'அரசு எவ்வழியோ அதன் வழியே நாங்களும்' என்கிற கோட்பாட்டைத்தான் கடைப்பிடித்து மக்களைக் காக்குகிறார்கள்!

கம்பம், ஏ. முருகன்.

◆ ''விண்ணைச் சாடும் தனியார் விமானங்கள்'' கட்டுரையில் (30.5.93 கல்கி) ட்ரை-லீஸ், வெட்-லீஸ் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. விமானத்தையும், விமானியையும் - இரண்டையும் - ஏற்றுக் கொள்வதுதான் வெட்லீஸ்; ட்ரை லீஸ் என்பது விமானத்தை மட்டும் லீஸில் எடுத்துக் கொள்வது. கட்டுரையில் மாற்றிக் கூறப்பட்டுள்ளது.

திருவனந்தபுரம், ந. பார்த்தசாரதி.

◆ கல்கியில் 'அன்று' தொகுப்பு பற்றிய குறிப்பும் அதிலிருந்து ஒரு கதையை வெளியிட்டிருப்பதையும் கண்டு மகிழ்ச்சியடைகிறேன். 'அ. மாதவையாதான். மாதவையர் என்று எப்படி அங்கே முளைத்தது. ஜாதி?' என்ற கேள்வி குறிப்பில் காணப்படுகிறது. உண்மையில் மாதவையா என்று இன்று அறியப்படும் கதாசிரியர் தம்முடைய பெயரை அ. மாதவையர் என்றே தமிழில் அன்று எழுதி வந்தார். ''பஞ்சாமிர்தம்'' மாதப் பத்திரிகை நடத்தி அதில் அவர் எழுதிய சிலகதைகளில் இவ்வாறே காணப்படுகிறது. ஆங்கிலத்தில் எழுதும் போது ஆங்கில மரபை யொட்டி மாதவையர் தம் பெயரை மாதவையா என்று எழுதியிருக்கலாம். பின்னர் அது அப்படியே மொழி பெயர்க்கப்பட்டிருக்கவும் கூடும்.

சென்னை - 2, மாலன்.

◆ வண்ண நிலவனின் 'கரையும் உருவங்கள்' சிறுகதையைப் படித்து முடித்ததும் நெஞ்சில் சோகம் நிரம்பினாலும் கூடவே ஒரு சிறந்த கதையைப் படித்த திறைவு ஏற்பட்டது. இயல்பான நடை... அதே நேரம் ஆழமான கருத்து. அதுவும் அந்தக் கடைசி வரிகள்.... அவற்றுக்கு எத்தனை வலிமை!

திருச்சி - 20, சரசுவதி பஞ்சு.

◆ 16 வாரங்கள் சூப்பர் சுறு சுறுப்பில் சென்ற ''மாயக் குதிரை'' சீக்கிரம் களைப்படைந்து முடிந்தது ஏமாற்றம் அளித்தது. புதுமையான கதைக் கரு; விஞ்ஞான ரீதியில் கொண்டு சென்ற முறையும் நினைவில் நிற்கின்றது. ரேபிஸ் வைரஸ் பற்றிய ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்திய கிருஷ்ணா டாவின்ஸிக்கு நன்றி.

சிதம்பரம், ஆர். தமிழரசி
தேவசேனாபதி.

◆ 'மாயக் குதிரை' நாவல் விறுவிறுப்பாக 16 வாரங்கள் ஓடி மனத்தில் மறையாமல் நின்றது. எதிர்பாராத முடிவு. அரஸின் படங்களுக்கும் பாராட்டுக்கள்.

வேலூர் - 2,
கே. பாலநாராயணன்.



வட்டமேஜை

"தந்தையின் சொல்லை நான் புறக்கணிக்க முடியாது. வீணாக முயற்சி செய்யாதே! உனக்கு உதவியாகச் சிறந்த தம்பி சத்ருக்னன் இருக்கிறான். எனக்கும் இங்கே ஒரு தம்பியிருக்கிறான். லக்ஷ்மணன் இருக்க எனக்கு என்ன குறை? நான்கு புத்திரர்களாகிய நாம் நம் தந்தையின் ஆணையைச் சரிவர நிறைவேற்றுவோம்" என்று ராமன் முடிவாக பரதனுக்குச் சொன்னான்.

பரதனுடன் வந்த புரோகிதக் கூட்டத்தில் ஒருவராயிருந்த மகா வித்துவான் ஜாபாலர் இந்தச் சமயத்தில் நடுவில் புகுந்து ராமசந்திரனுக்கு லோகாயதம் உபதேசித்தார். "தந்தையின் ஆணை என்று திரும்பத் திரும்ப ஏதோ சொல்லுகிறாய். தசரதன் என்பது ஓர் உடல். அது பஞ்சத்துவம் அடைந்து விட்டது. ஐம்பெரும் பூதங்களோடு கலந்து போய் விட்டது. முடிந்து போன அந்த உருவத்துக்கும் உனக்கும் இப்போது ஏதோ சம்பந்தம் இருப்பது போல் பேசுகிறாய். இது அறியாமை. கண்ணெதிரிலுள்ள சுகங்களை விட்டு விட்டுத் தருமம் என்றும் பரலோகம் என்றும் மூடர்களுடைய பேச்சை நீயும் பேசுகிறாய். துயரத்தில் மூழ்கிக் கூந்தலை வாரி எடுத்துக் கட்டாமலிருக்கும் ஒரு ஸ்திரீயைப் போல் அயோத்தி நகரம் துக்கத்தில கிடக்கிறது; உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. போய்ப் பட்டாபிஷேகம் செய்து கொண்டு சுகங்களை யனுபவித்துச் சந்தோஷமாய் இருப்பாய். பரதன் சொல்லுவதைக் கேள்! தந்தையின் கட்டளை என்று சொல்லிக் கொண்டு செய்ய வேண்டியதைச் செய்யாமலிருக்கிறாய்" என்று கூறினார்.

ராமனுக்கு ஜாபாலி சொன்னது மிகுந்த அதிருப்தியை உண்டாக்கிற்று. "சத்தியத்தை நீர் ஒரு பொருளாக மதிக்கவில்லை போலும். நீர் சொல்வது சரியாக இல்லை. நாஸ்திகம் பேசுகிறீர். சத்தியத்தைவிட மேலான ஒரு பொருள் உலகத்தில் இல்லை" என்றான் ராமன்.

வசிஷ்டர் அப்போது சமாதானப் படுத்தினார். "ராம! ஜாபாலி நாஸ்திகரல்ல. உன்னை எப்படியாவது அயோத்திக்குத் திரும்பிப் போகச் செய்ய வேண்டும் என்பதும் பரதனுடைய துக்கத்தை அகற்ற வேண்டும் என்பதும் அவருடைய கருத்து. உனக்குரிய ராஜ்யத்தை நீ பெற்றுக் கொண்டு மக்களைப் பரிபாலிக்க வேண்டும் என்கிற பெரு நோக்குடன் அவர் அவ்வாறு பேசினார். அவர் மேல் கோபிக்க வேண்டாம். ராஜ்ய பாரத்தை ஏற்றுக் கொள்ளுவது உன் குல தருமம். அதைப் பற்றிச் சந்தேகம் இல்லை. அது ஒரு புறமிருக்க மற்றொருபுறம் தந்தையின் ஆணை என்கிற பெரிய விஷயம் இருக்கிறது. இதைப் பெரிதாக நீ கருதுவதும் சரியே. ஆனால் பரிதாப நிலையிலுள்ள தம்பி பரதன் பழிக்கு அஞ்சி உன்னைத் தஞ்சமடைந்திருக்கிறான். அதை எப்படி நீ மறுக்கலாம். உன் பிராணனைப் போல் அவனிடம் நீ வைத்துள்ள அன்பு எங்கள் அனைவருக்கும் தெரியும். அண்டியவர்களைக் கைவிடுவது உன் சுபாவம் அல்ல. பரதனுடைய விண்ணப்பத்தை எப்படி நீ மறுக்கலாம்? தஞ்சமடைந்தவர்களைக் கைவிடுவதில்லை என்பதும் உன் விரதம் அல்லவா?"

ராமன் இசைவதாய்க் காணவில்லை. அச்சமயம் பரதன் சுமந்திரனைப் பார்த்து, "அண்ணன் என் பேரில் இரக்கம் கொள்ள மறுக்கிறான். சுமந்திரரே, தர்ப்பை கொண்டு வந்து பரப்புவீர். நான் இங்கே உபவாசமிருந்து உயிர் விடுவேன்" என்றான்.

சுமந்திரன் தயங்கி ராமசந்திரனைப் பார்த்தான். பரதன் தானே தர்ப்பைப் புல் எடுத்துப் பரப்பி அதன்மேல் அமர்ந்தான்.

"குழந்தாய், இது தகாது. எழுந்திரு. அயோத்திக்குப் போய் உன் கடமையைச் செய். க்ஷத்திரிய தருமத்துக்கு விரோதமான செயலைச் செய்யாதே!"

என்றான் ராமன்.

பரதன் எழுந்து நின்று, ''அயோத்தி நகரத்து ஜனங்களே! ஏன் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்? ராமசந்திரன் உங்களுக்கு வேண்டாமா? ஏன் பேசாமலிருக்கிறீர்கள்?'' என்றான்.

ஜனங்கள், ''ராமசந்திரன் சத்தியம் தவறமாட்டான். பிதுர் வாக்கியம் என்ற ஒன்றையே பிடித்து அசையாமல் நிற்கிறான். அவன் குணம் நமக்குத் தெரியும். அவன் அயோத்திக்கு வரமாட்டான். அவனை வற்புறுத்துவதில் என்ன பயன்?'' என்றார்கள்.

''தம்பி, இவர்கள் பேச்சைக் கேள். இவர்கள் நம் இருவருடைய ஹிதத்தையும் விரும்புகிறவர்கள், தரும புத்தி கொண்டவர்கள்'' என்றான் ராமன்.

பரதன் எழுந்து நின்று, ''நான் ஒரு பாவமும் அறியாதவன். மகாராஜாவினுடைய ஆணையை நடத்தியே தீர வேண்டுமென்றால் நான் வனத்தில் ராமனுக்குப் பதிலாக இருப்பேன். எனக்குப் பதிலாக அண்ணன் அயோத்தியையில் ராஜ்ய பரிபாலனம் செய்யட்டும்'' என்றான்.

ராமன் இதைக் கேட்டுச் சிரித்து, ''இந்த 'விநிமய பரிவர்த்தன' முறை இந்த விஷயத்தில் பொருந்துமா? இது கடை வியாபாரம் அல்லவே? ஒருவன் கடமையை மற்றொருவன் ஆபத்துக் காலங்களில் செய்வதுண்டு. செய்ய வேண்டிய விரதத்துக்கு வேண்டிய தேக சக்தியில்லாத காரணத்தினால் செய்யலாம். அண்ணன் இருக்க வேண்டிய நியமத்தைத் தம்பி எடுத்துக் கொள்ளலாம். ஆனால் எப்போது? அண்ணனுக்கு விரதத்தை நிறைவேற்றும் சக்தியில்லாமலிருந்தால் அப்படிச் செய்யலாம். என் விஷயத்தில் அது பொருந்தாது. வனவாசத்துக்குப் போதிய சக்தி எனக்கு இல்லை என்றும், பரதனுக்கு உண்டு என்றும் நீங்கள் யாராவது சொல்லுவீர்களா?'' என்று கேட்டான்.

அப்போது வசிஷ்டர் பரதனைப் பார்த்து, ''ராமனுடைய அதிகாரத்தைக் கொண்டு சக்கரவர்த்தித் திருமகனுக்காக நீ ராஜ்ய பரிபாலனம் செய். அப்படிச் செய்தால் பழியுமில்லை; சத்தியமும் காக்கப்படும்'' என்றார்.

ராஜாஜி

பரதனைத் தன் மடிமேல் உட்கார வைத்து ராமன் ''தம்பி, நான் தந்த ராஜ்யமாகவே எண்ணி நீ ஒப்புக் கொண்டு தந்தை சொற்படி நட'' என்று தன் அன்பின் சக்தியையெல்லாம் செலுத்திக் கேட்டுக் கொண்டான்.

அந்தச் சமயம் ராமன், பரதன், இருவர் திருமேனிகளும் இரு சூரிய பிம்பங்களைப் போல் ஒளி வீசி விளங்கின.

''அண்ணா, நீயே என் தந்தை,



என் தெய்வம். நீ சொல்லுகிறபடியே செய்கிறேன். உன் மிதியடியை எனக்குத் தந்தாயானால் உனக்குப் பதிலாக அதை வைத்துக் கொண்டு நான் பதினான்கு ஆண்டுகள் முடியும் வரையில் நகரத்துக்கு வெளியிலிருந்து கொண்டு உனக்காக ராஜ்ய பரிபாலன காரியங்களைச் செய்து, உன் பாதுகைக்கு என் பணியைச் சமர்ப்பிப்பேன். பதினைந்தாவது வருஷம் நீ நகரத்துக்கு வந்து ராஜ்யத்தை ஒப்புக் கொள்வாயாக'' என்று கூறிப் பரதன் முடித்தான்.

''அப்படியே!'' என்றான் சக்கரவர்த்தித் திருமகன்; தன் கால்களை அன்புடன் பாதுகை மேல் வைத்து எடுத்து பரதனிடம் தந்தான். அவனும் வணங்கிப் பெற்றுக் கொண்டு தன் தலைமேல் வைத்துக் கொண்டான்.

பரதனும் பரிவாரமும் அயோத்

தியை நோக்கிச் சென்றார்கள். வழியில் பரத்வாஜ முனிவரைக் கண்டு நடந்த விஷயங்களை அவரிடம் சொன்னார் கள். அவரும் பரதனுடைய குணத்தை யும் முயற்சியையும் பாராட்டி, ''உன் சீலமும் உன் குணமும் என்றென்றும் விளங்கும். தசரதன் மகன் அல்லவோ நீ? தண்ணீர் எப்படிப் பள்ளத்தை நோக்கி ஓடுகிறதோ அப்படி நெறி தவறாமல்உன் குலத்தின் சீலம் உன்னை அடைந்திருக்கிறது. உன்னைப் பெற்ற தசரதன் பாக்கியவான். அவன் இறக்க வில்லை. உயிருடனே உன் சொரூபத் தில் அமரனாக வாழ்கிறான்'' என்று சொல்லி ஆசீர்வதித்தார்.

**அ**வ்விடமிருந்து குகனுடைய இருப்பிடத்திற்குச் சென்று கங்கையைத் தாண்டி அயோத்தியை அடைந்தார்கள். பரதனும் பரிவாரமும் நகரத்துக்குள் நுழைந்தார்கள். தந்தையும் தமயனு மில்லாத நகரத்தை நெருங்கி வந்ததும், ''சாரதியே, பாழாய்க் கிடக்கிறதே, ஊர்!'' என்றான் பரதன்.

அவன் கண்ணுக்கு நகரம் அமா வாசை இருள் சூழ்ந்து, துக்கத்தில் ஆழ்ந்து கிடப்பதாகத் தோன்றியது. முந்தி கேகய தேசத்திலிருந்து வேகமாக வந்து நகரப் பிரவேசம் செய்த பொழுது, 'என்ன நடந்ததோ' என்று திகிலுடன் பிரவேசித்தான். இப்போது எல்லாம் நன்றாகத் தெரிந்த நிலையில் பிரவேசித் தான். ஒவ்வொன்றையும் எண்ணி எண் ணித் துக்கப்பட்டான்.

அரச மாளிகைக்குள் சென்றான். தந்தை இல்லாத சூன்யமான அந்த மாளிகையில் தாய்மார்களை இறக்கி விட்டு, விடை பெற்றுக் கொண்டு, சபா மண்டபத்தில் வசிஷ்டர் முதலானவர் களுக்குச் சொன்னான்.

''என் துக்கம் மிகப் பெரிது. அதை நந்திக் கிராமத்திலிருந்து சகித்துக் கொண்டு, நான் ராமனிடம் வாக்குக் கொடுத்தபடி காரியங்களை அங்கிருந்து கொண்டே பார்ப்பேன். அதற்கு வேண் டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள்'' என் றான்.

அவ்வாறே செய்யப்பட்டு, சபை கூட்டி, ''இந்த ராஜ்யம் ராமனுடையது. தாற்காலிகமாக என்னிடம் ஒப்புவித் திருக்கிறான். அண்ணனுக்குப் பதிலாக அவன் மிதியடியை ஆசனத்தில் அமர்த் தியிருக்கிறேன். அதன் அடிமையாக நான் அரசாங்கம் நடத்தி வருகிறேன்'' என்று பரதன் ராஜ சபையில் பிரதிக்ஞை செய்தான்.

**அ**ப்படியே ராஜ்ய பாரத்தை மந்திரிகளுடைய உதவியைக் கொண்டு நல்ல முறையில் நந்திக் கிராமத்தி லிருந்து கொண்டு ராமனுடைய வன வாசம் முடிந்து, சீதா சமேதமாக சக்கர வர்த்தித் திருமகன் திரும்பி வரும் வரை யில் ஒரு தவமாகக் கருதி நடத்தி வந் தான்.

தனக்கென்றல்லாமலும், வேறு எவ் விதப் பற்றும் கொள்ளாமலும் பகவா னுடைய சரணங்களில் பலனைச் சமர்ப் பித்து லோகோபகாரத்தை முன்னிட்டுக் கடமைகளைச் சரிவரச் செய்வது தவ மேயல்லவா? ராமன் காட்டில் தவ மிருந்த பதினான்கு வருஷ காலம் பரதன் அயோத்தியையில் நந்திக் கிராம வாசியாகத் தவம் செய்து வந்தான் என் பது பெரியோர்களுடைய விளக்கம்.

**சி**த்திரகூடப் பிரதேசத்தில் கொடிய ராக்ஷசர்கள் இருக்கிறார்கள். அவர்கள் தலைவன் ராவணனுடைய தம்பி கரன். இவனுக்கு ராமன் பேரில்



அடுத்த இதழில்....

- விபத்து கலாசாரத்திலிருந்து விடுபடுவது எப்போது?

வெகு துவேஷம். இந்தக் காரணத்தால் கரனும் அவனைச் சேர்ந்தவர்களும் சித்திரகூட வனத்துக்குள் அடிக்கடி பிரவேசித்துத் தங்களை இம்சை செய்து வருவதால், ரிஷிகள் அவ்விடத்தை விட்டு வேறு இடத்துக்குப் போக நிச்சயித்திருப்பதாக ராமனிடம் அவர்கள் தெரிவித்தார்கள். ராமன் எவ்வளவு தைரியம் சொல்லியும் அவர்கள் கேட்காமல், அவ்வாறே அந்த இடத்தை விட்டு வேறிடம் போய் விட்டார்கள்.

பரதன் திரும்பிப் போனது முதல் ராமனுக்குச் சித்திரகூடத்தில் மன நிம்மதியில்லை. தாய்மார்களும் தம்பியும் வந்து தன்னைச் சந்தித்துப் பேசியது அவனுக்குச் சதா நினைவிலிருந்து வந்தது. ஸ்மாரக சந்நிதியில் ஆற்றாமை இரட்டிக்கும். அந்த இடத்தை விட்டு வேறிடம் செல்வது நலம் என்று அவனுக்கும் தோன்றிற்று. ரிஷிகள் போய்விட்ட பிறகு ராம லக்ஷ்மணர்கள் சீதையுடன் சித்திரகூடத்தை விட்டு, தண்டகாரண்யத்தில் வேறு இடம் பார்த்துக் கொள்ள நிச்சயித்தார்கள்.

இவ்வாறு தீர்மானித்த பின் ராம லக்ஷ்மணர்கள் சீதையுடன் அத்திரி மகரிஷியின் ஆசிரமத்துக்குச் சென்று அவரை வணங்கித் தங்கள் யோசனையைத் தெரிவித்தார்கள். அத்திரி மகரிஷியின் மனைவி மகா தபஸ்வியான அனசூயையை, சீதை அவளை வணங்கி அவளுடைய ஆசியைப் பெற்றாள். ''வனம் சென்ற புருஷனுடன் நீ கஷ்டங்களை அனுபவித்து எல்லோருக்கும் வழி காட்டி வருகிறாய்'' என்று சீதையை மிகவும் பாராட்டித் தன் அன்புக்கு அடையாளமாக வஸ்திரமும், மங்கள ஆபரணங்களும், மஞ்சள் குங்குமமும், பரிமளப் பொடியும் கொடுத்தாள். அனசூயை மகா பாக்கியவதி. அவள் கொடுத்த வஸ்திராபரணம் சீதைக்கு அழியாத அழகும் ஆன்ம சக்தியும் தந்தன.

அவற்றைச் சீதை பெற்றுக் கொண்டு, ''என் கணவர் சக்கரவர்த்தித் திருமகன் என் மேல் பெற்ற தாயின் அன்பையும் தந்தையின் அன்பையும் ஒன்று சேர்த்துச் செலுத்தி வருகிறார். எனக்கு என்ன குறை?'' என்றாள்.

பிறகு போகவேண்டிய வழி கேட்டுத் தெரிந்து கொண்டு மூவரும் சென்றார்கள்.

(தொடரும்)



## சர்வதேசப் பரிசு பெற்ற படம்

இந்திரா காந்தி படுகொலைக்குப் பிறகு இறுதிச் சடங்குகள் நடந்த தினத்தில் எடுக்கப்பட்டது இந்தப் புகைப்படம்.

ராஜீவின் துக்கம் கலந்த கவலையும் ராஹுலின் புண்பட்டு நொறுங்கிய பிஞ்சு மனமும் அப்படியே படத்தில் பிரதிபலித்து வயிற்றைப் பிசைய வைக்கின்றன. சில காலம் சென்று நேர்ந்த ராஜீவின் அகால மரணம் இப்படத்துக்குக் கூடுதலான அர்த்தத்தைச் சேர்த்து விட்டது.

'குடும்பம்' என்ற தலைப்பில் பொருந்தக் கூடிய புகைப்படங்களுக்கான போட்டி ஒன்றை யுனெஸ்கோ மற்றும் ஏ.ஸி.ஸி.யு. இணைந்து நடத்தின. 133 நாடுகளிலிருந்து 9117 புகைப் படங்கள் இடம்பெற்ற அந்தப் போட்டியில் இப்படம் வெண்கலப் பதக்கமும் சான்றிதழும் பெற்றது. இதை எடுத்தவர் இந்திய அரசின் போட்டோ டிவிஷனைச் சேர்ந்த தேவ தோஷ் சென் குப்தா.



● தியாகராஜன், குடந்தை ❑

*? அரசு பாதுகாப்பு அளித்தால் லட்ச லட்சமாக எந்தெந்த அரசியல்வாதிகளுக்குப் பணம் தந்தேன் என்று பெயர்களை வெளியிடுவதாகக் கூறுகிறாரே ஹர்ஷத் மேத்தா? அரசு உதவுமா?*

! அவர் பணம் தந்திருக்கிறார் என்பது உறுதியாகி விட்டது. யார் யாருக்கு என்பது மட்டும்தான் தெரிய வர வேண்டும். இதற்கு அரசு தரும் பாதுகாப்பு அவர் உயிர் மற்றும் நியாயமான உடைமைகளுக்கு மட்டுமே இருக்க வேண்டும். அவர் செய்துள்ள குற்றங்களுக்குத் தண்டனை பெறுவதிலிருந்து பாதுகாப்பு அளித்து விடக்கூடாது. இதை அரசு தெளிவாக்கிச் செயல்படவில்லை எனில் பங்கு மார்க்கெட் ஊழலும் ஒரு போஃபர்ஸ் கதையாக முடிந்து விட வேண்டும் என்று அரசு விரும்புவதாகவே அர்த்தமாகும்.




● எம். சந்திரசேகர், மேட்டு மகாதானபுரம்.

*? மெட்ரோ சானல் பற்றி ஒன்றுமே சொல்ல மாட்டேங்கறீங்களே?*

! ஏன் சுவாமி, நீங்க நிஜமாவே வாரா வாரம் கல்கி வாங்கிப் படிக்கிறீங்களா, இல்லே... உங்க கேள்வியோ துணுக்கோ இடம் பெறும் போது அனுப்பப்படும் இலவசப் பிரதியோடு திருப்தி அடையறீங்களா? வீட்ல 16.5.93 இதழ் இருந்துச்சுன்னா ஒரு புரட்டுப் புரட்டுங்க..


● லட்சலட்சமாக....

● எம். அசோக் ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி

*? குஷ்புவை ஜெயலலிதா கொ.ப.செயாக நியமித்தால் அ.தி.மு.க வின் சரிவைச் சரிசெய்து விட முடியுமா?*

! ஒரு வேளை அதைச் சரி செய்துவிட முடிந்தாலும் குஷ்புவின் சரிவைச் சரி பண்ண முடியாமல் போகும்.

● என். மாதையன், சேலம்.

*? இந்தியாவில் ஊழல் செய்யாமல் ஆட்சி செய்யும் மாநிலம் எது?*

! சுவாசிக்காமல் உயிர் வாழும் உயிரினம் ஒண்ணு சொல்லுங்க பார்ப்போம்!

● ஏ. முருகன், கம்பம்.

*? இன்றைய இளைஞர்கள் ஏன் அதிகம் உணர்ச்சி வசப்படுகிறார்கள்?*

! அன்றைய இளைஞர்களும் மிக அதிகமாக உணர்ச்சி வசப்படத்தான் செய்தார்கள். இல்லாவிடில் நமக்கு எப்படி சுதந்திரம் கிடைத்திருக்கும்? வித்தியாசம் என்னவெனில் அன்றைய தலைவர்கள் உன்னதமானவர்கள். அவர்கள் இளைஞர்கள் முன் வைத்த இலட்சியங்களும் மிக உயர்தரமானவை. இன்றுள்ள தலைவர்கள் சுயநலமிகள். அதன் வெளிப்பாடாக அவர்கள் இளைஞர்கள் முன் வைக்கும் இலட்சியங்கள் அற்பமானவை.

● கே.ஆர். தேவேந்திரன், கொணவட்டம்.

*? 'டிஸ்மிஸ் செய்யுங்கள்' தலையங்கம் குறித்து எனக்கு இரண்டு சந்தேகங்கள். இன்றைய தமிழக அரசு டிஸ்மிஸ் ஆகக் கூடாது என்பதில் உங்களுக்குள்ள தர்க்க ரீதியான ஆவேச உணர்வு தி.மு.க. ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்பட இருந்தபோது துளிக்கூட இல்லையே ஏன்? இரண்டாவது, காங்கிரஸ் 'சிறந்த எதிர்க்கட்சியாகப் பணியாற்றி மக்களின் நன்மதிப்பைப் பெற்று, தேர்தலைச் சந்திக்க வேண்டும்; குறுக்கு வழியில் புகுந்தால் காணாமல் போய் விடும்' என்கிறீர்கள். ஜெயலலிதா இப்படி பணியாற்றித்தான் வெற்றி அடைந்தாரா?*

! தி.மு.க. இங்கே ஆண்ட போது ஆட்சியைக் கண்டிக்க வேண்டிய நேரத்தில் கண்டித்தும் வாழ்த்த வேண்டிய தருணத்தில் வாழ்த்தியும் கல்கி தன் கடமையைச் செவ்வனே செய்தது என்பதைப் பழைய ஏடுகளைப் புரட்டிப் பார்த்தால் தெளிவாகத்


● ஊழல் பற்றிப்...


● ...பேசத் தகுதியேது?



* புல்லஸ் யாகம்....

தெரியும். கலைஞர் ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்பட்டதைக் கல்கியைக் காட்டிலும் வன்மையாகக் கண்டித்த ஏடு இல்லை. உமது இரண்டாவது சந்தேகத்துக்குப் பதில் இதுதான். வாழப்பாடியும் மூப்பனாரும் எம்.ஜி.ஆர் - ஜெயலலிதா போல் டூயட் பாடி மக்களிடம் பிரபலமடைய முடியாது. அவர்களுக்கு உள்ள ஒரே வழி அடிமட்டத் தொண்டர்களுடன் சேர்ந்து சாமானிய மக்களிடம் பணியாற்றி அவர்களின் நன்மதிப்பைப் பெறுவதுதான்.

● சி. மகேஷ், மதுரை.

? *அயோத்தியில் சந்திராசுவாமி யாகம் நடத்துகிறாரே?*

! புல்ஸ்ஸ்.....

● மணியன், திருமருகல்.

? *பத்திரிகை தர்மம் அப்படின்னா என்னவோர்?*

! ''ஓ.சி.யில் படிக்கத் தருவது'' என்று அர்த்தம் கூறும் அளவுக்கு அதன் உண்மையான பொருள் இன்று பத்திரிகைகளால் மறக்கப்பட்டு விட்டது. பாஸிடிவ்வாக அது என்ன என்று கூற வேண்டும் என்றால் ஜர்னலிஸத்தில் நான் உங்களுக்குப் பாடம் நடத்தியாக வேண்டும். நிஜமாகவே தெரிந்து கொள்ள விரும்பினால் தனிப்பட்ட முறையில் கடிதம் எழுதுங்கள். அவகாசம் கிடைக்கும் போது விரிவாகப் பதில் போடுகிறேன்.

● பாலசுப்பிரமணியன், சென்னை - 52.

? *செண்ட்ரலில் பல்லவன் பஸ்களை நிறுத்த ஆட்டோ, டாக்ஸியினர் எதிர்ப்பு தெரிவித்துள்ளது குறித்து?*

! பஸ்களை ரயில் நிலையத்துக்கு வெளியே சாலையில் நிறுத்தி பயணிகளை ஏற்றிக் கொள்ளலாம்; நிலையத்தின் உள்ளே அல்ல. அங்கு ஆட்டோ - டாக்ஸிக்கு மட்டுமே இடம் ஒதுக்கப்பட்டு வந்திருக்கிறது. இப்போது மாற்ற அவசியம் இல்லை. எனவே, ஆட்டோ - டாக்ஸி ஓட்டுனர்களின் எதிர்ப்பில் நியாயம் இருக்கிறது. ஆனால் இந்த உரிமையைப் பயன்படுத்தி அவர்கள் பயணிகளிடம் ரேட் பேசி கொள்ளையடிப்பதில் நியாயம் சிறிதும் இல்லை..

● எஸ். ராமசுப்பிரமணியன், தூத்துக்குடி.

? *மனிதன் பணத்துக்கு அடிமையா அல்லது பணம் மனிதனுக்கு அடிமையா?*

! பின்னது மகிழ்ச்சி தருவது; முன்னது அருவருப்பானது.

● இரா. ரெங்கசாமி, வடுகபட்டி.

? *இளைய தலைமுறையை அதிகமாகப் பாதிப்பது அரசியலா? சினிமாவா?*

! பாலில் நீர் கலந்தது போல் ஆகிவிட்ட பிறகு இரண்டும் சேர்ந்து சம அளவில்தான் பாதித்துக் கெடுத்துக் கொண்டிருக்கின்றன.

● ஏ. ஜஹ்பர் காதர், அரியநாயகிபுரம்.

? *ஊழல் பற்றிப் பேசுவதற்குக் 'கருணாநிதிக்குத் தகுதி இல்லை' என்று எஸ்.டி.எஸ்ஸும், 'எஸ்.டி.எஸ்ஸுக்குத் தகுதி இல்லை' என்று ஆலடி அருணாவும் அறிக்கைப் போர் நடத்துகிறார்களே, அப்படியெனில் ஊழல் பற்றிப் பேச யாருக்குத்தான் தகுதி இருக்கிறது?*

! அரியநாயகிபுரம் ஏ. ஜஹ்பர் காதருக்கு.

● அஷ்ரப் அலி, நக்கலை.

? *கலைஞரின் புதல்வர் மு.க. அழகிரியும் தீவிர அரசியலில் இறங்கி விட்டார் போல?*

! மன்றம் கூடாதென்றால் பாசறைகள் முளைக்கின்றன. இருக்கட்டும், இந்த வை. கோ. எதிர்ப்பு முயற்சி, கடைசியில் ஸ்டாலினுக்கே போட்டியாக முடியாமல் இருந்தால் சரி.

● எஸ். பாலாஜி, சென்னை.

? *மனைவியை அனுப்ப மறுத்த மாமியார் வீட்டின் மீது குண்டு வீச்சாமே?*

! ஆயுதக் கலாசாரம் அடுப்படிவரை வந்துட்டுதுங்க!



* கொ.ப.செயலாக...



* ...நியமித்ததால்



* நேரடி படி....



* ....ஆடி.....

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
க. தியாகராஜன்,
6 - 31, பூம்புகார் நெடுஞ்சாலை,
கொரநாட்டுக்கருப்பூர்,
குடந்தை - 612 501.



# மாறாத சோகமும் மாற வேண்டும்

லண்டனில் சச்சியின் கணவர் ஸ்ரீநாத் காலமாகி விட்டார். அந்தச் செய்தி தந்த அதிர்ச்சியிலிருந்து சற்று மீண்டு வந்து சுதாரித்துக் கொண்ட போது, அவளுக்கு ஆதரவாக உடனடியாக லண்டன் செல்லத் துடித்தது என் மனம். ஆனால் அப்படிப் போக முடியாத சூழ்நிலை.

ரிலீஸ் தேதி குறிக்கப்பட்டு விட்ட படத்தின் கிளைமாக்ஸ் காட்சி படமாக்கப்பட்டுக் கொண்டிருந்தது. மிகப் பெரிய ஹீரோவான நாகேஸ்வர ராவ் நடித்த படம். பெயர் ராவணுடே ராமுடைத்தே (ராவணனே ராமனானால்). அதனால் என் ஒருத்திக்காக ரிலீஸ் தேதியை ஒத்திவைக்க முடியாத சூழ்நிலை. தவித்துப் போனேன். சச்சியிடம் மீண்டும் போனில் பேசி விளக்கிய போது அவள் அசாதாரண உறுதியுடனும் தைரியத்துடனும் பேசினாள் :

''இல்லையம்மா. நீ வர வேண்டாம். நானே எல்லா காரியங்களையும் முடித்து விட்டுப் புறப்பட்டு வருகிறேன். மெட்றாஸில் வந்து நான் இறங்கும் போது என்னுடைய சோகத்தைத் தாங்கிக் கொள்ள நீ தோள் கொடுப்பாய் இல்லையா... அது போதும்மா எனக்கு...''

- இப்படி சச்சி பேசியதும், எனக்கு அவள் தைரியத்தைக் கண்டு ஆச்சரியம் ஏற்பட்ட அதே சமயத்தில் மனம் இன்னும் நொறுங்கிப் போனது உண்மை. ஆனால் அவள் போனை வைக்கும் முன் பேசிய வார்த்தைகள் என்னைச் சென்னையிலேயே கட்டிப் போட்டன.

''என் கணவர் உன்னை ஒரு தாயைப் போல் நினைத்துப் பழகினார். அதைப் பற்றிய பகைமையான நினைவுகள் உன் மனசில் இருக்கும். அப்படியிருக்கும் போது அவரது இறுதிச் சடங்குகளை நீ வந்து பார்க்க வேண்டாம். பழைய, இனிய நினைவுகளுடனேயே இருந்து விடு...'' என்றாள்.

தவிர்க்க முடியாத காரணங்களால் சச்சியின் மாமியாரும் லண்டன் போய் இறுதிச் சடங்குகளில் கலந்து கொள்ள முடியாமல் போயிற்று. அவள் மாமனார் டாக்டர் ராவ் மட்டுமே அந்தச் சமயத்தில் போய் சச்சிக்குத் துணைநின்று உதவ முடிந்தது.

காரியங்கள் முடிந்து சச்சி சென்னை திரும்பிய போது விமான நிலையத்துக்குப் போனேன். அவளைக் கண்டதும் சோகம் தாளாமல் உடைந்து போன என்னை அவளே தேற்ற வேண்டியதாகப் போயிற்று.

திடீரென்று மாரடைப்பு காரணமாய் இறப்பதற்குச் சில தினங்களுக்கு முன், என் மாப்பிள்ளை லண்டனில் நடந்து போய்க் கொண்டிருந்த போது அவர் காலில் சிலுவை ஒன்று தட்டுப் பட்டது. அவருக்கு எப்போதுமே கிறிஸ்தவ மதத்தின்பால் மரியாதையும் ஈடுபாடும் உண்டு. அம் மதத்தவர் ஆற்றி வரும் கல்வி மற்றும் மருத்துவப் பணிகளை அவர் பாராட்டுவார். அப்படிப்பட்டவருக்கு அந்தச் சிலுவை பொக்கிஷமாகத் தோன்றியது. அந்தச் சமயத்தில் சச்சியிடம் ''நான் பிறப்பால் பிராமண வகுப்பைச் சேர்ந்தவனானாலும் என் இறுதிச் சடங்குகள் கிறிஸ்தவ வழக்கப்படி நடத்தப்பட வேண்டும்'' என்று மிகத் தெளிவாகக் கூறியிருந்தார்.

அவர் விருப்பப்படியே சடங்குகள் நடத்தப்பட்டன. லண்டனில் இருந்த இந்திய தூதரக அதிகாரிகள் மாப்பிள்ளையின் உடலை இந்தியாவுக்கு எடுத்துச் செல்ல ஏற்பாடுகள் செய்து தர முன்வந்த போதிலும் சச்சி அதை ஏற்கவில்லை. சில நாட்கள் முன்பாகக் கணவர் தைத்துக் கொண்ட புதிய சூட்டை அணிவித்து, அவருக்கு மிகவும் பிடித்த காரட் அல்வா செய்து சூட் பாக்கெட்டில் வைத்தாள். கூடவே ஒரு கடிதமும்...

'இந்த நாலு வயதுக் குழந்தையை ஒற்றை ஆளாய் நின்று வளர்த்து ஆளாக்க என்றைக்கும் உங்கள் ஆன்மா எனக்கு

சௌகார் ஜானகி


நவரஸ நினைவுகள் - 21
நவரஸ நினை

உறுதுணையாய் இருந்து, போதிய மனத் தெம்பையும் ஆசிகளையும் வழங்க வேண்டும்...' என்று அக்கடிதத்தில் குறிப்பிட்டிருந்தாள்.

ஒரு தேவாலயத்தில் இறுதிச் சடங்குக்குரிய பிரார்த்தனைகள் நடந்த பிறகு மின் தகன முறையில் இறுதிச் சடங்குகள் முடிக்கப்பட்டன.

இருபத்திரண்டு வயதில், பூவையும் பொட்டையும் இழந்து வந்து நின்ற சச்சியைப் பார்க்கப் பார்க்க என் தாயுள்ளம் வேதனையில் துடித்தது.

முதல் சில மாதங்கள் அடிக்கடி தனியாக இருட்டறைக்குள் தன்னை அடைத்துக் கொண்டு வாடினாள். கணவர் எதிரில்



● மகனுடன் சச்சி

இருப்பதாக பாவித்து ஏதேனும் பேசினாள்.

இதை நீடிக்க விட்டால் நிலைமை மிகவும் சீரியஸாகும் என உணர்ந்து அவளை மெள்ள தேற்ற ஆரம்பித்தேன். 'நீ பழைய சச்சியாக மாற வேண்டும். உன் கணவரின் ஆன்மா உன் கூடவே இருப்பதாக நீ நம்புகிறாய் இல்லையா? அப்படியானால் இவ்வளவு துக்கப்படலாமா...? மெள்ள சோகத்திலிருந்து மீண்டு வா...' என்று சச்சியிடம் பேசினேன். அவளிடம் சில வரவேற்கத்தக்க மாறுதல்கள் தோன்ற ஆரம்பித்தன.

ஒரு நாள் சச்சி மெதுவாக என்னிடம் வந்து, ''அம்மா நான் நெற்றியில் குங்குமப் பொட்டு வைத்துக் கொண்டால் அது தவறா...?'' என்று கேட்டாள்.

''நீ விருப்பப்பட்டால் கொஞ்சமும் தயங்காமல் குங்குமம் இட்டுக் கொள். 'யாராவது ஏதாவது சொல்வார்களே' என்று கவலைப்படாதே...'' என்று அவளுக்கு ஊக்கமும் தைரியமும் கொடுத்தேன்.

அதன் பிறகு சச்சி சின்னதாகப் பொட்டு வைத்துக் கொள்ள ஆரம்பித்தாள். பின்னர் சில சமயங்களில் தானாகவே ஒரு ஒற்றை ரோஜா பூவைத் தலையில் வைத்துக் கொள்ளும் அளவுக்கு முன்னேறினாள்.

சச்சி மெள்ள மெள்ள முன்னேறி வருவது கண்டு என் மனத்தில் இருந்த பாரமும் சோகமும் குறைய ஆரம்பித்தன.

ஆனாலும், ''ஏனம்மா எனக்கு மட்டும் தாலி பாக்கியம் இவ்வளவு சீக்கிரமாகப் போய் விட்டது'' என்று அடிக்கொரு தடவை என்னிடம் கேட்டுக் கொண்டுதான் இருந்தாள் சச்சி. இதற்குப் பின்னணியாக ஒரு சம்பவமும் நடந்திருந்தது.

சச்சி-ஸ்ரீநாத் திருமணம் முடிந்து தலைப் பொங்கல் சமயத்தில் என் வீட்டுக்கு வந்திருந்தார்கள். அச்சமயம் சச்சியின் வைர மோதிரமும் தாலிச் சரடும் வீட்டிலிருந்த

'இந்தக் குழந்தையை ஒற்றை ஆளாய் நின்று வளர்த்து ஆளாக்க என்றைக்கும் உங்கள் ஆன்மா எனக்கு உறுதுணையாய் இருந்து, போதிய மனத் தெம்பையும் ஆசிகளையும் வழங்க வேண்டும்...'

போதே காணாமல் போயின. போலீஸில் புகார் கொடுத்து, ஒரு மோப்ப நாய் வரவழைக்கப்பட்டு, அது வீட்டில் வேலை செய்த ஒரு பெண்ணின் பேரில் இருந்த சந்தேகத்தை உறுதிப்படுத்தியது. அவள் குற்றச்சாட்டை மறுத்தாள். ஸ்டேஷனில் விசாரித்தால் அப் பெண் பல கொடுமைகளை அனுபவிக்க வேண்டி வரலாம் என்று எண்ணி நான் புகாரை வாபஸ் வாங்கி விட்டேன்.

தாலி காணாமல் போனது சச்சியை சென்டிமென்டலாக மிகவும் பாதித்தது. அதன்பின் ஒரு வெள்ளிக் கிழமையன்று எங்கள் வீட்டுப் பூஜை அறையில் சச்சியின் கழுத்தில் மீண்டும் தாலி கட்டினார் மாப்பிள்ளை.

கணவனை இழந்த நிலையில் லண்டனிலிருந்து வந்த சச்சி 'இரண்டாவது தாலியும் என் கழுத்தில் தங்கவில்லையே' என்று கதறி அழுதாள். அந்தத் தாலியை சச்சி என்ன செய்தாள் தெரியுமா...?

(தொடரும்)



பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்:
வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு
அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka